

இப்போது ரூ. 365
அதிகம் செலுத்தினால் போதும்,
அமெரிக்கா செல்வதற்கான
எங்கள் உல்லாசப்பயண டிக்கெட்
அளிக்கும் வாய்ப்போ மிக அதிகம் !
போகும்போது அல்லது வரும்போது
ஓரிடத்தில் இறங்கலாம் !

இதோ, இந்திர லோகம் போன்ற
உல்லாச புரிகள் ஐந்து !
எது வேண்டும் உங்களுக்கு ?
லண்டன், பாரிஸ், ஜெனிவா, ரோம்,
அல்லது ஃப்ராங்ஃபர்ட். அதோடு,
நியூயார்க்கிலிருந்து வட அமெரிக்க
நகரங்களுக்கும் கனடாவிற்கும் வசதி
யான இணைப்புகளையும் வழங்குகிறோம்.

ஆயின், களிப்பூட்டும் எல்லா விவரங்க
ளையும் கேட்டறிய; முதலில் எங்கள்
அலுவலகம் அல்லது உங்கள் பயண
ஏஜெண்டை சென்று பாருங்கள்.

**ஏர்-இந்தியா**
சுபமான பயணம்...
சுபமான செய்தி

# அமெரிக்கா செல்லும் வழியில் ஐரோப்பாவில் இறங்குவீர்.

AI.3508A

# தாளிப்பு - கடுகு

## இட்லி - வடா - தோசா!

டில்லியில் உள்ள விவேக் தியேட்டரில் அமர் - அக்பர் - அந்தோணி படம் ஓடிக் கொண்டு இருக்கிறது. பெரிய அளவில் பானர் எழுதி வைத்திருக்கிறார்கள். தியேட்டரை ஒட்டியிருக்கும் ஓர் ஓட்டல்காரர் அதே அளவு பெரிய பானரைத் தயாரித்து அதில் 'இட்லி - வடா - தோசா' என்று எழுதி வைத்திருந்தார்.






## காலி நாற்காலிகள்!

சினிமா பார்க்கும் போது டைரக்டர் பாலசந்தருக்குத் தமது வலது நாற்காலியும் இடது நாற்காலியும் காலியாக இருக்க வேண்டும் என்பது விருப்பம். படம் பார்க்கும் போது யாரும் 'டிஸ்டர்ப்' செய்வதை அவர் விரும்புவதில்லை.



## கமலின் துணிவு!



சமீபத்தில் டில்லிக்கு வந்திருந்த கமலஹாசன், 'அவள் அப்படித்தான்' திரைப்படத்தைப் பத்திரிகை நிருபர்களுக்குப் போட்டுக் காட்டினார்.

காட்சி முடிந்ததும் சுமார் அரைமணி நேரம் படத்தைப் பற்றிப் பல கேள்விகளுக்கு அவரும், டைரக்டர் ருத்ரய்யாவும் தெளிவான பதில்களைத் தந்தனர்.

எந்த பட டைரக்டரும் கதாநாயகரும் இதுவரை செய்யாத (அல்லது செய்யத் துணியாத ) காரியம் இது.

கேட்கப்பட்ட பல கேள்விகளில் ஒன்று: "சிவாஜி கணேசனின் சாயல் உங்கள் நடிப்பில் சிறிது காணப்பட்டதே?"

"சிவாஜியின் இன்ஃப்ளுயன்ஸ் இல்லாத நடிகனே தமிழ்நாட்டில் இல்லை" என்றார் கமல்.





டைரக்டர் ருத்ரய்யா

## சர்வாதிகாரி ஜோக்!

ஒரு சர்வாதிகார நாட்டில் பத்திரிகையில் கீழ்க்கண்ட போட்டி வெளியாயிற்று:

நமது சர்வாதிகாரியைக் கேலி செய்து ஒரு நையாண்டி கட்டுரை.

முதல் பரிசு:

**20** வருட சிறைத்தண்டனை!

## (+) ப்ளஸ், மைனஸ் (−) போடுங்கள்

9 8 7 6 5 4 3 2 1 = 621.
இரண்டு கூட்டல் குறிகளையும் (+) இரண்டு கழித்தல் (—) குறிகளையும் மேலே உள்ள எண்களுக்கு இடையில் சரியான இடங்களில் போடுங்கள். விடை 621 வரவேண்டும்.

விடை: (98 + 7 − 6) + (543 − 21) = 621

## ரயில்வே பட்ஜெட்

இவ்வாண்டு ரயில்வே பட்ஜெட்டின் முக்கிய அம்சங்களை விமர்சிக்குமாறு மூன்று பேர்களைக் கேட்டபோது அவர்கள் அளித்த பதில்:

1. மொத்த காய்கறி வியாபாரி திரு எம். வி. ஜெயராம் நாயுடு:

''சரக்குகளைக் கொண்டு வருவதற்கான கட்டணத்தை ஐந்து சதவிகிதம் உயர்த்தியிருக்கிறார்கள். ஜலந்தர், டெல்லி போன்ற இடங்களிலிருந்து உருளைக் கிழங்கும், சீசன் சமயத்தில் நாக்பூரிலிருந்து தக்காளியும், மேலும் பல காய்கறிகள் ஆந்திராவிலிருந்தும், வருகின்றன. இதனால் காய்கறிகளின் விலை நிச்சயம் உயர வாய்ப்பு இருக்கிறது. அதோடு நூற்றுக்கணக்கான சில்லறை வியாபாரிகள் தினமும் கொத்தவால் சாவடி போய்க் காய்கறி வாங்கி வந்து பல இடங்களில் வியாபாரம் செய்கின்றனர். இவர்களில் பெரும்பாலோர் மின்சார ரயிலில் பிரயாணம் செய்பவர்கள். மின்சார ரயில் மாதாந்திர சீஸன் டிக்கெட் கட்டணம் இரு மடங்காக உயர்த்தப் பட இருப்பதால் இந்த எளியவர்கள் மிகவும் பாதிக்கப்படுவார்கள்.

2. குடும்பத்தலைவி. திருமதி லக்ஷ்மி:

''மூன்று வயதுக்கு மேலான குழந்தைகளுக்கு ரயிலில் டிக்கெட் வாங்க வேண்டும் என்பதை ஐந்து வயதுக்கு மேல் உள்ள குழந்தைகளுக்கு வாங்கினால் போதும் என்று மாற்றியுள்ளார் நமது ரயில்வே அமைச்சர். சர்வதேசக் குழந்தைகள் ஆண்டில் இதைவிட நல்லதொரு பரிசைக் குழந்தைகளுக்கு அளிக்க முடியாது.

3. திரு. சௌந்தரராஜன், 'பாண்ட்ஸ்' கம்பெனி ஊழியர்:

''சரக்குகளுக்குக் கட்டண உயர்வால் எல்லாப் பொருள்களின் விலைகளும் ஏறப் போகின்றன. சந்தேகமில்லை.

''நம் நாட்டில் அரசு மக்களுக்கு அளிக்கும் சலுகைகளில் மிகவும் அதிகமானது மின்சார ரயில் மாதாந்திர சீஸன் பாஸ் ஒன்றுதான்'' என்று நான் அடிக்கடி நண்பர்களிடம் சொல்வதுண்டு. நான் சொல்லி வந்தது மத்திய ரயில்வே அமைச்சர்காதில் விழுந்து விட்டிருக்குமோ என்னவோ! இதுவரை கொடுத்து வந்த ஸீஸன் டிக்கெட் சலுகை அதிகம்தான் என்றாலும் திடீரென்று கட்டணத்தை இரு மடங்காக்கினால் அதை எப்படி சமாளிப்பது?

பேட்டி: ரங்கா.

புகைப்படம்: மன்னை மூர்த்தி.

லக்ஷ்மி சௌந்தரராஜன் ஜெயராம்



## ஆர்.எஸ்.எஸ்





உத்தரப்பிரதேசத்தில் திரு யாதவ் குத்தப் பட்டதையடுத்து ஆர். எஸ். எஸ். மறுபடி பத்திரிகைகளில் அதிகமாக இடம் பெற ஆரம்பித்துள்ளது.

டாக்டர் கேசவ் பலிராம் ஹெட்கேவார் அவர்களால் தொடங்கப்பட்டு, திரு எம். எஸ். கோல்வால்கர் (குருஜி) அவர்களது திறமையான தலைமையில் மிகக் கடுமையான முப்பது ஆண்டுகளைச் சந்தித்து, தற்போது திரு பாலா சாஹேப் தேவரஸ் தலைமையில் இவ்வியக்கம் நடை போட்டுவருகின்றது.

மக்களின் ஒரு பகுதியிடையே இவ்வியக்கத்தைப் பற்றிப் பலவித சந்தேகங்கள் பரவி இருக்கின்றன. சென்னைப் பிராந்திய அலுவலகக் காரியதரிசி திரு சுகுமாரிடம் விளக்கங்களைக் கேட்டபோது அவர் அளித்த பதில்கள்:

நாயகன்: ஆர். எஸ். எஸ். ஒரு 'Para-Military' இயக்கம் என்ற ஒரு கருத்து மக்களிடையே பரவியிருக்கிறதே. அவ்வாறு இருக்குமானால் அது தேச நலனுக்கு எதிரிடையானதே தவிர நன்மையைப் பயக்காது. இதற்கு என்ன விளக்கம் கொடுக்கிறீர்கள்?

சுகுமார்: ஆர். எஸ். எஸ்ஸை ஒரு 'Para-Military' இயக்கம் என்று வருணித்தால் சாரணர் இயக்கமும் அம்மாதிரியானதுதான். ஆர். எஸ். எஸ்.ஸின் கொள்கைகளின் அடிப்படையில் ஒவ்வொரு இந்தியப் பிரஜைக்கும் மன ஒழுக்கத்தோடு உடல் உறுதியும் அவசியமாகிறது. அதற்காக நாங்கள் காலையிலும் மாலையிலும் சில உடற்பயிற்சிகளைச் செய்கிறோம். நாங்கள் செய்யும் பயிற்சிகள் யாவும் சட்டத்துக்கு உட்பட்டவையே! எங்களைப் போய் Para-Military இயக்கம் என்று கருதுவது மிகவும் வேடிக்கையானது!

நாயகன்: மதச் சார்பான இயக்கம் Communal Movement என்று குற்றம் சாட்டப் படுகிறதே!

1. ஆர். எஸ். எஸ். இளைஞர் படை அணிவகுப்பு.
2. கோல்வால்கர். கேசவ் பலிராம் ஹெட்கேவார்;





3. திருச்சியில் ஆர். எஸ். எஸ். வெள்ளத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உணவு, உடை வழங்கல்.

4. ரத்த தானம் செய்யும் சுயம் சேவகர்களைத் தமிழக ஆளுநர் பார்வையிடுகிறார்.

சுகுமார்: நம் நாட்டின் ஜனத் தொகையில் எண்பது சதவிகிதம் ஹிந்துக்கள். மக்களின் அடிப்படை நெறிகளை உயர்த்தித் தேசிய மனப்பான்மையை வளர்க்கவேண்டும் என்கிற நோக்கில் செயல்படும் போது இம்மாதிரியான பெரும்பான்மை சமுதாயத்தின் பழக்க வழக்கங்களின் அடிப்படையில் செயல்பட வேண்டியிருக்கிறது. இதனால் மற்ற மதங்களை நாங்கள் எதிர்க்கிறோம் என்பது விஷமத்தனமான வாதம். தேசிய மனப்பான்மைகொண்ட எவரானாலும் இதில் சேர்ந்து மக்களுக்குத் தொண்டு புரியலாம். ஆர். எஸ். எஸ்ஸில் ஹிந்துக்களைத் தவிர பிற மதத்தவரும் இருக்கின்றனர்.



5. பாலா சாகேப் தேவரஸ்.

நாயகன்: திருமதி இந்திரா காந்தி ஆர். எஸ். எஸ்.ஸுக்குக் கடுமையான எதிர்ப்பு தெரிவிப்பதன் காரணம் என்ன?

சுகுமார்: அரசியல் காரணங்கள்தான்! குறிப்பாக இரண்டைக் கூறலாம். ஜனசங்கம் பலம் வாய்ந்த எதிர்க்கட்சியாக காங்கிரஸுக்கு இருந்தது. எங்களை ஜனசங்கத்தோடு சேர்த்தே திருமதி இந்திரா காந்தி பார்ப்பதால்தான் கடுமையான எதிர்ப்பைக் காட்டுகிறார். அதோடு அரசாங்கத்தைச் சரியான முறையில் தட்டிக் கேட்கக் கூடிய கட்டுக் கோப்பான சமூக இயக்கம் எங்களைத் தவிர வேறு நம் நாட்டில் இல்லை. மக்களுடைய அபிப்பிராயங்களையும், கண்டனங்களையும் Effective ஆன முறையில் அரசாங்கத்திடம் தெரிவிக்கிறோம் என்கிற பயம்தான் எங்களிடம் அவருக்குள்ள எதிர்ப்புக்கு இன்னொரு காரணம். நெருக்கடிக் காலத்தின் போது, ஜனநாயகத்துக்கு ஆபத்து வந்தபோது சமுதாயத்துக்குத் தீமையான பாதிப்பு ஏற்படும் என்பதால் சர்வாதிகாரத்தை எதிர்த்து நாங்கள் செயல்பட்டு அவரது ஆட்சி கவிழ எங்களால் இயன்ற அளவு பணியாற்றியது இதற்குச் சரியான உதாரணம்!

நாயகன்: தற்போது ஜனதா அரசுக்கும் உங்கள் இயக்கத்துக்கும் சுமுகமான உறவு நிலை உள்ளதா?

சுகுமார்: ஆர். எஸ். எஸ். ஜனதாவின் இளைஞர் அணியாக மாறிவிட வேண்டும் என்று எவ்வளவோ முயற்சிகள் நடந்தன. மறுத்து விட்டோம். அரசியல் கலப்பற்ற ஒரு சமூக இயக்கம் இது! பதவியோ, விளம்பரமோ எங்களுக்குத் தேவையில்லை. ஆத்ம பூர்வமான தேசப் பணிதான் எங்களது நோக்கு!

நாயகன்: உத்தரப் பிரதேசத்தில் பொது இடங்களில் உங்களது நடவடிக்கைகளுக்குத் தடை விதிக்கப்பட்டு உள்ளதே... அது எதனால்?

சுகுமார்: உத்தரப் பிரதேச முதல்வர் ராம் நரேஷ் யாதவின் சார்பாளர்களுக்கு முன்னாள் ஜனசங்கத்தைச் சேர்ந்தவர்கள் மேல் ஒரு கசப்புணர்ச்சி. எங்களை ஜனசங்கத்துடன் இணைத்துப் பார்ப்பதால்தான் இம்மாதிரி நடவடிக்கை எடுத்துள்ளனர். சமீபத்தில் கேரளாவில் தெல்லிச்சேரியில் ஒரு பொது இடத்தில் எங்களது முகாமுக்கு அனுமதி வழங்கப்பட்டு, கடைசி நிமிஷத்தில் ரத்து செய்து விட்டனர். ஆனால் மக்கள், எங்கள் ஊழியர்களை தங்களது விருந்தினராக வைத்துக் கொள்ளத் தாங்களாக முன்வந்தனர். இம்மாதிரி மக்கள் ஆதரவு இருக்கும் வரை எங்களது இயக்கத்தை எந்த அரசியல் சக்தியாலும் ஒன்றும் செய்துவிட முடியாது!

பேட்டி: நாயகன்

# ராமச்சந்திர சோழன்!



செம்பியன்

முன்னொரு காலத்தில் தமிழ் நாட்டை ராமச்சந்திர சோழன் என்று ஒரு ராஜா ஆண்டு வந்தார்...

[என்ன, 'உம்' சொல்லக் காணோமே? 'உம்' கொட்டினால் தானே மேலே கதை சொல்ல ஓடும்? ... மேலே தொடரவா? சரி...]

ராமச்சந்திர சோழனுடைய ராஜ்யத்திலே சிவராமன், சிவராமன் என்று ஓர் அறிஞர் இருந்தார். இந்த அறிஞர் தினம் தினம் மணி மணியாக ஏதாவது எழுதிக் கொண்டே இருப்பார்.

ஒரு நாள் சிவராமன் ராஜ சபைக்குப் போனார். அப்போ ராமச்சந்திர சோழன் எதையோ தீவிரமாக யோசனை பண்ணிக் கொண்டிருந்தார். ''என்ன பலமான யோசனை?'' என்று கேட்டார் சிவராமன்.

'' '75–25' என்கிற ஒரு புரட்சிகரமான திட்டம் பத்தி யோசிக்கிறேன்'' என்றார் ராமச்சந்திர சோழன்.

''அப்படியென்றால்?''

''எனக்கு எழுபத்தைந்து வோட்டுக்கள் விழுந்தால் எதிராளிக்கு 25 வோட்டுக்கள் தான் விழணும் என்று அர்த்தம்.''

''அப்படியா?''

''அதோடு இன்னொரு அர்த்தமும் உண்டு. உழுவனுக்கு 75, உரிமையாளனுக்கு 25!''

''உழைப்பவனுக்கு 75ஆ அல்லது குத்தகைதாரனுக்கா?''

''குத்தகை தாரனுக்குத்தான்!''

''அதாவது உழைப்பாளிக்கும் இன்றி, முதல் போட்டவனுக்கும் இன்றி, இடையில் பலபேருடைய நிலங்களைக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டு, ஒரு காரியமும் பண்ணாமல் புகையிலை குதப்புகிறவனுக்கு 75சதம் என்கிறீர்கள்!''

''புகையிலை போடுவது தவறா? வெற்றிலை, புகையிலைப் பயிர்கள் செழித்து வியாபாரம் பெருக வேண்டாமா?''

''பேஷாக நடக்கட்டும், ஆட்சேபணை இல்லை. இவர்களில் நிலத் தீர்வை தண்ணீர் தீர்வை எல்லாம் செலுத்துவது யார்?''

''வழக்கம்போல் நிலச் சொந்தக்காரன் தான். அவனுக்குக் கிடைக்கும் 25ல் கட்டி விட வேண்டியதுதானே.''

''தீர்வைகளைச் செலுத்துவது மட்டுமில்லை, விதைக்கு எருவுக்கு என்றும் அவன் உதவ வேண்டியிருக்கிறது. இப்படி யெல்லாம் செலவழித்த பிறகு 25ல் அவனுக்கு என்ன மிஞ்சும்? சாதாரணமாக ஒரு கம்பெனிக்குக் கடன் தந்தால் 12 சதம் வட்டி கிடைக்கிறது. பாங்கில் போட்டு வைத்தால் கூட 8 முதல் 10 சதம் வட்டி கிடைக்கிறது. பின்னதற்கு வரியும் கிடையாது. இதில் ஆபத்தும் இல்லை. ஆனால் நாட்டின் உணவு உற்பத்திப் பெருக்கத்துக்கு உதவ நிலத்தில் முதலீடு செய்கிறவனுக்கு என்ன கிடைக்கும்?''

''கட்டி வரவில்லை என்றால் விற்று விட்டுப் போக வேண்டியதுதானே'' என்றார் ராமச்சந்திர சோழன்.

''எப்படி விற்க முடியும்? வெளி ஆசாமி வந்து விலை பேசுமுன்னர், 'குத்தகை தாரனை வெளியேற்று' என்பான். அது நடக்காத காரியம். குத்தகை தாரனுக்கே விற்று விடலாமென்றால் அவனும் வாங்கிக் கொள்ளப் போவதில்லை. ஏனென்றால் ஏற்கெனவே அவன் அதைத் தன் சொந்த நிலம் போலவே அனுபவித்துக் கொண்டிருக்கிறான், எதற்காகக் காசு கொடுத்து வாங்கப் போகிறான்?''

''ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. நிலத்தின் உடைமையாளர் இலவசமாகவே அதைக் கொடுத்துவிட்டுப் போய் விடலாமே!''

''அதுவும் சாத்தியமில்லை. விற்றது போல் காட்டுவதற்காகவாவது பத்திரம் எழுத ஸ்டாம்ப் வாங்கியாக வேண்டும். ரிஜிஸ்திரார் என்ன சொல்கிறார்? 'இந்த நிலத்தின் மதிப்பு இவ்வளவு; இதற்கு இவ்வளவு ரூபாய்க்கு ஸ்டாம்ப் பேப்பர் வாங்கியாக வேண்டும்' என்கிறார். ஆனால் அதே தரமுள்ள நிலத்தை உச்சவரம்புச் சட்டத்தின் கீழ் அரசு எடுத்துக் கொள்ளும்போது விலை ஒன்றுக்குப் பாதியாகக் குறைந்து போகிறது.''

''அதற்கென்ன செய்ய?'' என்றார் ராமச்சந்திர சோழர். ''அரசு பேரமும் தனியார் பேரமும் ஒன்றாகி விடுமா? அரசு எவ்வளவு நன்மைகளை மக்களுக்குச் செய்கிறது! உதாரணமாகக் கடன் வசூலை ஒத்தி வைக்கவில்லையா?''

''இரண்டு, மூன்று வருஷம் கடன் வசூலை ஒத்திப் போட்டதில், வட்டி, ஒன்றுக்கு மூன்றாகக் குட்டிபோட்டு விட்டது. கூட்டுத்

தொகை மலைக்க வைப்பதாக இருக்கிறது. எப்படி விவசாயி திருப்பித் தரப் போகிறான்? இதிலும் இரட்டை நீதி நிலவுகிறது. தனியார் கடன் வசூல் கூடாது. அரசாங்கம், பாங்குகள் கடன்களை வசூலிக்கலாம்!''

''அதற்கு என்ன பண்ணட்டும்? அரசு நடக்க வேண்டாமா? வருவாய் இருந்தால் தானே அரசும் கூட்டுறவு பாங்குகளும் இயங்க முடியும்?''

''அப்போ கடன் தருகிற தனியாருக்கு மட்டும் செலவுகள் ஒன்றும் நேராதாக்கும்?''

.''செலவுகள் இருந்தால் என்ன? நிலப் பிரபுக்கள் எப்படியும் சமாளித்துக் கொள்வார்கள்.''

''நிலப் பிரபுக்களா? உச்சவரம்புச் சட்டம் கொண்டு வந்த பிறகு நிலப் பிரபுக்கள் என்று சொல்லும்படி எத்தனை பேர் இருக்கிறார்கள்? கணவர் விட்டுச் சென்ற ஒன்றரை ஏக்கரைக் குத்தகைக்கு விட்டு ஜீவனம் நடத்தும் விதவை, வாழ்நாள் முழுதும் சேமித்த பணத்தைக் கொண்டு பிறந்த மண்ணில் தனக்கென்று நிலம் இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு இரண்டு ஏக்கர் வாங்கிக் கொண்ட ஓய்வு பெற்ற உத்யோகஸ்தர் இப்படிப் பட்டவர்கள்தாமே இன்று அதிகம்? இவர்களும் இன்று குத்தகைத்தாரர்களிடமிருந்து எதையும் சரிவரப் பெற முடிவதில்லை. 40 சதம் கிடைக்க வேண்டும் என்ற சட்டமாவது பெயரளவுக்கு இருக்கிறதே என்று அற்பத் திருப்தி அடைந்துள்ளார்கள். இனி அதுவும் இராது!''

''அற்ப விஷயங்களிலெல்லாம் திருப்தி அடையலாமா? அதனால்தான் அந்த அற்பத் திருப்தி கூட இல்லாமல் செய்து விடப் போகிறேன்!'' என்றார் ராமச்சந்திர சோழன்.

''உற்பத்தியாகும் நெல்லும் நல்ல விலைக்குப் போகவில்லையே'' என்றார் சிவராமன். ''தனியார் வியாபாரத்தில் குறைத்துக் கேட்கிறார்கள். அரசுக் கொள் முதலோ சரியில்லை. முன்னே போனால் கடிக்கிறது பின்னே போனால் உதைக்கிறது என்கிற நிலை!''

''அதற்கு நான் என்ன பண்ணட்டும்?'' என்றார் ராமச்சந்திர சோழன். ''அரசாங்க தானியக் கிடங்குகள் ஏற்கெனவே நிரம்பி வழிகின்றன. ஏற்றுமதி செய்யலாமா, கூலிக்குப் பதில் தானியங்களைத் தரலாமா என்று யோசித்து வருகிறேன். இந்த நிலையில் மேன் மேலும் நெல் பிடித்து எங்கே அடுக்க?''

''சங்கடம்தான்'' என்று ஒப்புக் கொண்டார் சிவராமன். ''இப்போ சிறு நிலச் சுவான்தார்கள் எல்லாம் என்ன சொல்கிறார்கள் தெரியுமா? 'இப்படி புதுப் புதுச் சட்டங்கள் கொண்டு வந்து எங்களை வதைப்பதைவிட, எங்கள் நிலங்களையெல்லாம் அரசே எடுத்துக் கொள்ளட்டும். அரசே குத்தகை தாரர்களுடன் போராடிக் கொள்ளட்டும். எங்களுக்குத் தர்ம நியாயமான ஒரு விலை நிலத்துக்குக் கிடைக்கச் செய்தால் போதும்' என்கிறார்கள்!''

''நிலத்தை எடுத்துக் கொள்ளலாம், தர்ம நியாயமான விலை என்றீர்களே, அதில்தான் சிக்கல். வேண்டுமானால் ஒன்று செய்வோம். நிலத்தை எடுத்துக் கொள்ளும் போதே, 'தர்மம் தழைக்கும்' என்ற தலைப்பில் ஒரு சினிமாவும் எடுப்போம். அந்தச் சினிமாவில் நீதி நிலைக்கும், வாய்மை வெல்லும், உழைப்பு உயர்வு தரும் என்பது நிச்சயம்! மக்கள் சந்தோஷப்படுவார்கள்.''

இப்படி மன்னர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே அரண்மனை வாசலில், ''ராமச்சந்திர சோழன் வாழ்க!'' என்ற கோஷங்கள் எழுந்தன. அகமும் முகமும் மலர ராஜா உப்பரிகைக்குச் சென்று தரிசனம் தந்தார். ''மும்மாரி பெய்கிறதா?'' என்று வினவினார்.

''தேவரீர் ஆட்சியில் மும்மாரி என்ன அடிக்கடி புயலே வீசுகிறது'' என்றனர் மக்கள். மறுபடியும் வாழ்க கோஷங்கள் எழுந்தன.

கோஷம் எழுப்பியவர்களில் சிறு நிலச் சுவான்தார்களும் பலர் இருக்கக் கண்டு வியந்தார் சிவராமன். ''மற்றவர்களுடன் சேர்ந்து நீங்களும் வாழ்த்துகிறீர்களே, எதற்கு?'' என்று கேட்டார்.

''அதுவா? 'தர்மம் தழைக்கும்' என்ற தலைப்பில் சினிமா எடுக்கப் போகிறாராமே புரட்சித் தலைவர், ராமச்சந்திர சோழன் அதற்காகத்தான்!''

''அப்போ உங்களுடைய கோரிக்கைகள்?''

''அவை நிறைவேறும் என்ற நம்பிக்கை எங்களுக்கு என்றைக்குமே இருந்ததில்லை. 'எங்கள் தலையெழுத்து ஒழிக! எங்கள் தலைவிதி ஒழிக!' என்று மனசுக்குள் கோஷம் போடுவோம். வெளிப்படையாக, 'ராமச்சந்திர சோழன் வாழ்க' என்று முழக்குவோம்'' என்று அவர்கள் சொன்னார்கள்.

இதைக் கேட்டு, சிவராமன் மூர்ச்சை அடைந்து விழவில்லை. ஏனென்றால் அவர் தினம் தினம் மணி மணியாக எழுதும் அறிஞர்! அவருக்குப் புரியாததா?

---

நிருபர்: நாட்டியத்தில் இயற்கை நாட்டியம்னு கூட இருக்கா என்ன...?

நடனமணி: ஓ! உச்சி வேளையில் மவுண்ட் ரோட்டில் காலில் செருப்பில்லாம நடந்து பாருங்க... உங்களுக்கே அது வரும்!

உ. ராஜாஜி.



# பாட்டிமார்களும் பேத்திமார்களும்

ஜெயகாந்தன்

## 7. 'அக்கரைக்குப் போகக் கூடாதாமே!'

அக்கரையில் வெள்ளையம்மாளின் வீடு மற்ற பெரும்பாலான வீடுகளைப் போல் ஓலை வேய்ந்த குடிசையாக இல்லை. இதுபோன்ற வீடுகளை அவர்கள் 'கல்லு ஊடு' என்றழைத் தார்கள். குடிசை வீடுகளை விடவும் அது கொஞ்சம் பெரிதாக இருந்தது. கூரையின் மீது நாட்டு ஓடுகள் வேயப் பட்டிருந்தன. மரத்தில் ஏதும் வண்ணம் பூசாமல் ஒற்றைக் கதவுள்ள ஓர் அறைகூட இருந்தது அந்த வீட்டில்.

''எங்க ஊட்டுக்காரு கட்ன ஊடு இது... இன்னு இன்னு நெனச்சிக்கினு இந்த ஊட்டை கட்னாரோ... ஒரு நாளுகூட தங்காமப் பூட் டாரு... பூட்டாருன்னு இன்னு நினைச்சிக் கிறே நீ?... கண்ணாலே பார்க்காம எப்பிடி கண்ணு நம்பறது? இங்கேயிருந்து சிங்கப் பூருக்குச் சரக்கு ஏத்திக்கினு போனாரே... தோணி வருது, போனவரு வரலே, கேட்டா எனக்குத் தெரியாது உனக்குத் தெரியாதுன் றானுவ... சிங்கப்பூரிலே எவளோ சிறுக்காரி யோட சேந்துக்கினு ஓடிட்டாருன்னு வந்து கதை சொல்றானுவ கண்ணு...'' என்று



அவள் புருஷனின் நினைவில் கண்கள் கலங்க மோவாயில் கையூன்றி அறைச் சன்னலுக்கு அப்பால் தகிக்கும் வெய்யிலில் பசேலென்று மின்னுகின்ற கடலைப் பார்த்தாள்.

வெள்ளையம்மாள் சொல்லுவதைக் கேட் கும் போது சிங்காரத்துக்குத் தன் தமக்கை பொன்னம்மாளின் நினைவு வந்தது. அவள் நிலைமையும் இப்படித்தானே?... அந்த அத் தானின் முகம் மட்டும் லேசாக நினைவில் தெரிகிறது. மற்ற விஷயங்கள் இரவில் வீட்டுப் பின்கட்டில் கூடுகிற பெண்கள் மகா சபையில் அங்கொன்றும் இங்கொன்றுமாக — அவர்கள் பேசும்போது கிடைத்த தகவல்கள் மூலம் அறிந்த கதைதான்.

பொன்னம்மாள் சில சமயங்களில் வேறு யாருமில்லாதபோது சிங்காரத்தைத் தனியே அழைத்துக் கொண்டு போய் முதல் மகா யுத்தத்தில் தன் புருஷன் சண்டைக்குப் போன கதையையும், அவர் வருவார் என்று அவளுள் உறுதியாக இருக்கிற நம்பிக்கையையும் இந்தக் குழந்தையோடு பகிர்ந்து கொள் வாள். அத்தான் வரும்போது உனக்கு என் னென்ன வாங்கி வருவார் தெரியுமா? என்று தனது கற்பனைகளையெல்லாம் குழைத்துத் திரட்டிய கனவுச் சித்திரங்களை வர்ணித்துத் தன்னை மறந்து குதூகலிப்பாள்...

அந்தப் பொன்னம்மாளே செம்படவச்சி வேடம் தரித்துக் கொண்டு அக்கரை பாஷை யில் பேசிக் கொண்டிருப்பதுபோல், இவளது புருஷனையும் தன் நினைவில் தெரிகிற மார்த் தாண்டன் பிள்ளையையும் வேஷம் மாற்றிக் கற்பனை செய்தான் சிங்காரம்... அதைத் தொடர்ந்து, அந்தச் செம்படவ அத்தானின் தாயாக, ரொம்பத்தான் பாப்பாரச் சீலம் கொழிக்கிற ஔவையாரம்மாளை நினைத்துப் பார்க்க அவனுக்குச் சிரிப்பு வந்தது...

தான் துயரமான தன் கதையை இவனிடம் சொல்லிக் கண் கலங்கிக் கொண்டிருக்க, அதைக் கேட்டுச் சிரிக்கிற இந்தக் குழந் தையைப் பார்த்துத் தனது அசட்டுத் தனத்தை நொந்து கொண்ட வெள்ளையம் மாள்... ''என்னமோ பழங்கதை... தள்ளு.. எல்லாக் கதையையும் சமுத்திரமாதா பார்த் துக்கினுதான் இருக்கிறா...''

''சமுத்திர மாதா...'' என்று ஒருமுறை தன்னுள்ளே சொல்லிப் பார்த்துக் கொண் டான் சிங்காரம். அவள் அந்த வார்த்தை யைச் சொல்லும்போது கன்னத்தில் அடித் துக் கொண்டு சாமி கும்பிட்டாள்...

''அங்கே போலாமா, வரியா? வாவா...'' என்று சன்னல் வழியே தெரியும் சமுத்தி ரத்தைக் காட்டி வெள்ளையம்மாளின் முந் தானையைப் பிடித்திழுத்தான்...

''ஐயையோ! இந்த வெய்யிலிலயா?... மணலு எப்பிடி இருக்கும் தெரியுமா... வறுத்துக் கொட்டின மாதிரி... வேணும் கண்ணு... உனுக்குத் தாங்காது...'' என்று அவனது பாதங்களை வருடி அதன் மென் மையை ரசித்தாள் வெள்ளையம்மாள்.

''முடியாது... எல்லாம் எனக்குத் தாங் கும்... வா...'' என்று அவளை அவன் இழுத்த போது மெய்யாகவே அவளால் அவன் இழுப்புக்குச் சாயாமல் சமாளிக்க முடிய வில்லை.

''ஐயையோ...'' என்று அவள் கத்துவது, ஒரு ராகம் போல் அவள் அதை இழுத்துக் கிரீச்சிட உச்சரிப்பதெல்லாம் அவனுக்கு ரசமாக இருந்தன.

அவளை அலங்க மலங்க அவன் இழுத்துக் கொண்டு அந்தக் 'கல்லு வீட்டின்' புறக் கடைவழியே வெளிப்பட்டபோது —

வெள்ளையம்மாளின் மகன் ரஞ்சிதம் வெள்ளிபோல் பளபளக்கும் ஆய்ந்த மீன்கள் நிறைந்த சட்டியுடன் ஒரு தென்னங்கீற்று

மறைவிலிருந்து வெளிப்பட்டு எதிரே வந்தான்...

''ஐயையோ!... பாரேன் இந்தப் புள்ளேயை... வாடி சமுத்திரம் பாக்கப் போலாம்னு இழுக்கிறதெ! தோ, நா வந்துடறேன்... நீ கொழம்பு காச்சி வை...'' என்று கூவிச் சொல்லி விட்டு, சிங்காரத்தின் கூட நடந்தாள் வெள்ளையம்மாள்:

''ஐயே! கையெ வுடு புள்ளே... சேலெ அவுறுது...'' என்று செல்லமாக அவன் கையை உதறிக் கொண்டு, அவன் எதிரே நின்று அவள் சேலையை உதறி உதறிப் பின்னர் கொசுவி உடுத்திக் கொள்ளுவதைக் கண் கொட்டாமல் பார்த்தான் சிங்காரம்...

''உன்னைப் பள்ளிக் கூடத்துக்குப் போவச் சொன்னா, அங்கேயிருந்து அம்மாம் பெரிய மதில்மேலே ஏறி... தோணி ஏறி... அக் கரைக்கு வந்து... இப்ப சமுத்திரம் பாத்து உனக்கு என்ன ஆவணும்?...'' என்று அவன் கன்னத்தை நிமிண்டினாள். அவள் விரல்களிலிருந்து மீன் கவிச்சி வாடை வீசியது... அதுவும் அவனுக்கு ரசமாயிருந்தது.

வெள்ளையம்மாள் பயமுறுத்தியது போல் அந்த மணல் பரப்பு ஒன்றும் பாலைவனம் போல் தகிக்கவில்லை. சுகமாகக் கடலிலிருந்து அப்போதுதான் எழுந்து வந்த ஈரக்காற்று வருடி வருடி வீசிக் கொண்டிருந்தது... கரையோரத் தென்னைமரங்கள் உல்லாசமாய்த் தலையசைத்து அசைத்து இவர்கள் நடந்த பாதையில் நிழலைக் கவித்தது...

சிங்காரம் நட்டநடு மணல் வெளியில் கால் பரப்பி, இடுப்பில் கையூன்றிக் கொண்டு கடலைக் கண்ணுக்கெட்டியவரை பார்வையால் துளைத்துத் தொடு வானத்தையும் ஊடுருவிப் பார்த்தான்....

'சமுத்திர மாதா' என்று வெள்ளையம்மாள் அவனுடைய காதில் வந்து சொல்லுவது போல் பிடரி குறுகுறுத்தது.

கடலின் அலைகள் குதிப்பதற்கு இணையாக அவன் கரையில் நின்று சந்தோஷத்துடன் துள்ளி ஆடி விழுந்து புரண்டு... அலைகளில் நனைந்து ஒரு பெரிய அலை வந்து காலைப் புரட்டத் 'தொப்'பென்று விழுந்ததைப் பார்த்துக் கைகொட்டிச் சிரித்தாள் வெள்ளையம்மாள். கைநிறைய ஈரமணலை வாரிக் கரையில் நனையாமல் சேலை முழங்காலுக்கு மேல் வரிந்து கொண்டு நிற்கும் அவளது கால்களைக் குறி பார்த்து வீசினான்... அவள் பயந்து திரும்பி ஓடியதால் ஈரமண் அவளது பிருஷ்டத்தில் அப்பிக் கொண்டதைப் பார்த்து அவன் கைதட்டிச் சிரித்த போது, அவன் எதிர்பாராத நேரத்தில் பின்னால் வந்த ஓர் அலை அவனை இடித்துத் தள்ளியது... மறுபடியும் தன் பங்குக்குக் கைதட்டி அவனைப் பரிகாசம் செய்தாள் வெள்ளையம்மாள்...

அடுப்பில் மீன் குழம்பு கொதித்து மணம் பரப்பியது. ரஞ்சிதம் அறைச் சன்னல் வழியாகத் தூரத்தில் கடலருகே நின்றிருக்கும் தாயின் முதுகுப் புறத்தையும், கண்ணுக்குத் தெரியாமல் பார்வை சரிகிற இடத்தில் குதித்துக் குதித்து எம்புவதால் அடிக்கடி தெரியும் சிறுக்குவின் தலையையும் பார்த்தாள்.



''யம்மோவ்... கொயம்பு காச்சிட்டேன், சோறு துன்ன வா... யம்மோவ்...'' என்று வாயருகே, காற்றை மறைப்பதற்காக ஒர கையைக் கை மறித்து நீளமாய்க் குரலெடுத்துக் கூவினாள் ரஞ்சிதம்.

சிங்காரத்தின் சிரிப்போடு, கடல் அலைகளின் இடையிடையே நீர்க்கமாய்ப் பெருமூச்சு விட்டுக் கொள்கிற கடலின் மௌனத்தின் நடுவே ''ஓவ்...'' என்று அம்மாவை ரஞ்சிதம் கூவி அழைக்கிற குரலைக் கேட்டுக் கரைக்கு ஓடி வந்தான் சிங்காரம்...

''வாரோமடி... வாரோம்...'' என்று பதிலுக்குத் திரும்பக் குரல் கொடுத்தாள் வெள்ளையம்மாள்...

கரைக்கு வந்த சிங்காரத்தின் ஈரத்தலையைத் தன் முந்தானையால் துவட்டி விட்டாள். தலையைத் துவட்டி அவன் முகத்தை அழுந்தத் துடைத்துக் கைகளில் ஏந்திக் கொண்டு பளீரென்று அவன் சிரிப்பதைப் பார்த்து அவன் கன்னத்தில் முத்தமிட்டாள் வெள்ளைச்சி.

''யம்மோவ்...'' என்று ரஞ்சிதம் இப்போது வீட்டுக்கு வெளியே வந்து ஒரு தென்னை மரத்தைப் பிடித்துக் கொண்டு கடலைப் பார்த்துக் கூவினாள்.

''ஓடியா... ஓடியா... நாழியாவுது... உனக்குப் பள்ளிக்கூடம் மறுபடியும் தோணி ஏறிப் போவணும்... சொன்னியே பாதிரியாருகிட்ட... சொன்ன படி நடந்துக்க வேண்டாமா?... ஓடியா!... நாளைக்கி வரலாம்... நெதம் வரலாம்... கடலு எங்கே பூடுது... உனக்கு அழவா அழவா ஒளிஞ்சலுங்க., சோழிங்க எல்லாம் ரஞ்சிதம் வெச்சிருக்கா... நான் வாங்கித் தரேன் வா, கண்ணு... இந்தச் சோழிங்களைப் பொறுக்கி இப்ப ஆவுமா?'' என்று மணலில் மண்டிக் கிடக்கிற சின்னச்சின்ன அற்புதங்களில் லயித்துப் பொறுக்கிக் கொண்டிருந்த சிங்காரத்தை அழைத்துக் கொண்டு போனாள் வெள்ளையம்மாள்.

சிங்காரத்துக்கு அவள் சோறும் மீனும் ஊட்டினாள்... அவளிடம் ஒரு கவளம் வாங்கிக் கொண்டு ரஞ்சிதம் ஒரு புட்டுக் கூடை நிறையக் கொண்டு வந்து கவிழ்த்த பல விதமான ஒளிஞ்சல்கள், சோழிகள், ராவணன் முழிகள் எல்லாவற்றையும் ஏதோ ஒரு வரிசையில் அடுக்கி ஒரு பெரிய மீனை வரைந்திருந்தான் சிங்காரம்...

அதைப் பார்த்து விட்டு ரஞ்சிதம் குதித்தாள். ''இதை, இப்படியே — நீ நாளைக்கி வர வரைக்கும் வெச்சிருப்பேன்'' என்று குதூகலத்துடன் கிறீச்சிட்ட குரலில் கூவினாள் ரஞ்சிதம்...

அவன் எதையும் காதில் வாங்கிக் கொள்ளாமல் அந்த மீன் கோலத்தில் அமைத்த செதில்களைச் செப்பம் செய்து மாற்றி மாற்றிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

மறுநாள் ரஞ்சிதம் அந்தக் ஒளிஞ்சல் சித்திரத்தைக் கலைக்காமல் வைத்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்...

''அக்கரைக்குப் போகக் கூடாதாமே... சின்னம்மா பெரிசா புத்தி சொல்ல வந்துட்டா... அண்ணாத்தை வேற அதிகாரம் பண்றான்...'' என்று மறுநாள் அதேநேரம் சிங்காரம் மனம் கொதித்துக் கொண்டிருந்தான்...

(தொடரும்)

# மும்மூர்த்திகளும் வாழைப்பழமும்



தமிழ் நாட்டில் விளையும் வாழைப்பழங்களை இறைவன் பேரை வைத்துப் பொருத்தமாக அழைக்கிறார்கள். எப்படி?

பூவன் பழம்: பூவன் என்றால் பிரும்மா. திருமாலின் நாபித் தாமரையிலிருந்து பிறந்தவன். அதுபோல வயிற்றுக் கோளாறு, மலச்சிக்கல் முதலிய கோளாறுகளைப் போக்கி உடலுக்குப் புது சக்தி உண்டு பண்ணுவதால் இதற்குப் பூவன் பழம் என்று பெயர்.

மொந்தன் பழம்: இதன் சரியான பெயர் முகுந்தன் பழம். காத்தல் தொழிலை உடைய திருமாலுக்கு முகுந்தன் என்று பெயர். திருமாலின் நிறமான மரகதப் பச்சைநிறம் உடையதுஇப்பழம். அமச்சத்து நிறைந்து இருப்பதால் இது உடலைக் காப்பதால் முகுந்தன் பழம் எனப்பெயர் பெற்றது.

பேயன் பழம்: பேய்களுடன் ஆடுவதால் பேயன் என்றபெயர் சிவனுக்கு உரியதாகும். உடல் சாம்பல் நிறம். இப்பழமும் சாம்பல் நிறம். அழிக்கும் தொழிலை அதாவது தீமையை அழிக்கும் குணம் உடையவன் சிவன். அம்மை, மூலம் போன்ற நோய்களை இப்பழம் அழிக்கும்.

நேந்திரம் பழம்: தவறு செய்த இந்திரனை தே இந்திரன் என்று தன்னிடம் ஒளிந்து கொள்ள வந்த இந்திரனை வாழை மரம் தள்ளியதாக ஒரு வரலாறு உண்டு. அதனால் இப்பழம் நேந்திரன் பழம் எனப் பெயர் பெற்றது. சில சமயம் தீமையும் சிலசமயம் நன்மையும் செய்யும் குணம் உடையது. இந்திரனும் அப்படித்தானே?

—புராணச் சொற்பொழிவில் நீடாமங்கலம் கிருஷ்ணமூர்த்தி பாகவதர் கூறியது.

கேட்டவர்: ''சங்கரி புத்திரன்.''

# ஆந்திர மாநிலத்தின் துரித மாறுதல்!

ஆந்திரப் பிரதேசத்தில் இயற்கை அளவற்ற வளத்தைக் கொண்டு செழிப்புடன் துலங்குகிறது. தேசத்தின் இதய பீடமாகவும், தொழிலக நவீன வாய்ப்புக்கள் மிகுந்துள்ளதாகவுமுள்ள ஆந்திரப் பிரதேசம் இந்தியாவின் மூலை முடுக்குகளிலுமுள்ள நவீன தொழில் அதிபர்களைக் கவர்ந்திழுக்கிறது.

கிட்டத்தட்ட 260 நடுத்தர, பிரும்மாண்டமான தொழிலகங்களில் 476 கோடி ரூபாய்களுக்கு மேல் முதலீடு செய்யப்பட்டு, மாநிலத்தின் தொழில் வளத்தைத் துரிதப்படுத்தியுள்ளது.

காக்கிநடாவில் நிறுவப்பட்டுள்ள 232 கோடி ரூபாய் உரத் தொழிற்சாலைக்கு 1978 ஜுலை 7ந் தேதி பாரத ராஷ்டிரபதி அஸ்திவாரக்கல் நாட்டியுள்ளார். 1981ம் ஆண்டில் இதன் உற்பத்தி தொடங்கவிருக் கிறது 4.95 லட்சம் டன்கள் யூரியா தயாராகி, வருஷம் 90 கோடி ரூபாய் மதிப்பீடு கிடைக்க விருக்கிறது.

D.O. I & P.R. 30/18-79

# பணம், உணவு

நம்மில் ஒவ்வொருவருக்கும் இன்றியமையாத, நம் வாழ்க்கையின் ஆதார கருதிகளாக விளங்குகிற, இரு பொருள்கள் பணமும் உணவும். **நேஷனல் புக் டிரஸ்ட்** இவை தொடர்பான சுவையான இரு நூல்களை அண்மையில் வெளியிட்டுள்ளது :

**நாணயங்கள்** (ஆங்கிலத்திலிருந்து தமிழில் -- ஏ. குளந்தை) இந்திய நாணயங்களின் சுவையான வரலாறை, வெவ்வேறு அரசர்களின் விதவிதமான காசுகளை, விவரிக்கிறது -- ஏராளமான புகைப்படங்களுடன் (பக். 362, ரூ. 20)

**உங்கள் உணவும் நீங்களும்** (ஆங்கிலத்திலிருந்து தமிழில் தம்பி சீனிவாசன்) குழந்தை, பெரியவர், கர்ப்பிணி இளம் தாய் ஆகிய பல்வேறு சாராருக்கேற்ற சத்தான உணவு வகைகளையும், பயன் தரும் உணவுப் பழக்கங்களையும் விரிவாகக் கூறுகிறது. எல்லா வீடுகளிலும் இருக்க வேண்டிய நூல். (பக். 128, ரூ. 6-75)

# புதிய பிரதேசங்கள்

புதிய பிரதேசங்களுக்குச் செல்ல வேண்டும், அவற்றின் புதுமையை நுகர வேண்டும், என்பதும் மனிதனின் ஓர் அடிப்படைத் தாகம். நீங்கள் வீட்டிலிருந்தவாறு இத்தாகத்தைத் தீர்த்துக் கொள்ளும்படியான புத்தகங்களை நேஷனல் புக் டிரஸ்ட் வெளியிட்டிருக்கிறது. இவ்வகையில் **நிகோபார் தீவுகள்** (பக். 304; ரூ. 7), **மலேசியா** (பக் 188; ரூ. 13-75) ஆகியவை அண்மை வெளியீடுகள். இப்பிரதேசங்களைப் பல புகைப்படங்களுடன் அறிமுகப் படுத்தும் தகவல் களஞ்சியங்கள்.

# சாதனைகள்

சாதனைகள் புரிந்துள்ள மேதைகள், மகான்களின் வாழ்க்கை விவரங்கள் பால் ஓர் ஆர்வமும் மனிதருக்கு இயல்பு. ஸ்ரீ அரவிந்தர், ஜே. ஸி. போஸ், பாரதியார், பத்கண்டே, கபீர், போன்ற பல சிறந்த இந்தியர்களின் சரிதைகளை மலிவுப் பதிப்புகளாக நாங்கள் வெளியிட்டுள்ளோம்.

**எங்கள் விரிவான புத்தகப் பட்டியலுக்கு எழுதுங்கள்.**

**நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா,** ஏ-5, கிரீன் பார்க், புது டில்லி, 110016 அல்லது **பாரி நிலையம்,** 59, பிராட்வே, சென்னை 600001 ஆகிய இடங்களிலும் எல்லா பிரபல புத்தகக் கடைகளிலும் எமது நூல்கள் கிடைக்கும். ரூ. 10க்கு மேற்பட்ட ஆர்டர்களை டில்லி விலாசத்திலிருந்து தபால் செலவின்றிப் பெறலாம்.




நீங்காத செல்வமெலாம்
நிறைத்துவைக்கும் ஸ்ரீதேவி
மாங்காட்டுக் காமாட்சி
மனதுவைத்தாள் அம்மானே
மாங்காட்டுக் காமாட்சி
மனதுவைத்த காரணத்தால்
ஆங்காரமின்றி அமைதி கொண்டேன் அம்மானே!

பூவோடு குங்குமமும்
பொருத்திவைக்கும் காமாட்சி
காவலிலே வந்தெனக்குக்
கைகொடுத்தாள் அம்மானே
காவலிலே வந்தெனக்குக்
கைகொடுத்த காரணத்தால்
கோவிலிலே கோடிமுறை கும்பிட்டேன் அம்மானே!

செங்குமுதப் பனிவாயில்
தித்திக்கும் தேன்சிதறி
தங்கமுகப் பொன்னருவி
தழுவிநின்றாள் அம்மானே
தங்கமுகப் பொன்னருவி
தழுவிநின்ற காரணத்தால்
பங்கமிலாக் குழந்தையைப்போல் பரவுகிறேன் அம்மானே

கொடியுலவும் சிற்றிடையில்
கோலமிகும் அருள்காட்டி
படியளந்தே மைந்தனெனைப்
பாடவைத்தாள் அம்மானே
படியளந்தே மைந்தனெனைப் -
பாடவைத்த காரணத்தால்
அடிஅடியாய் அவள்பெயரை அளந்துவைத்தேன் அம்மானே!

காடுகொண்ட காமாட்சி
கனிவுடனே எனைக்காக்க
வீடுகொண்டாள், மைந்தனுக்கு
வெற்றிதந்தாள் அம்மானே
வீடுகொண்டு மைந்தனுக்கு
வெற்றிதந்த காரணத்தால்
ஏடுகொண்டு நானவளை ஏற்றுகிறேன் அம்மானே!

இப்பிறப்புக் குள்ளே
இருப்பதெலாம் துன்பமென
அப்பிறப்பைக் கேட்டேன்
அடிமைஇவன் அம்மானே
அப்பிறப்பைக் கேட்ட
அடிமைஇவன் கண்ணெதிரே
முப்பிறப்பைச் சொல்லி முடுக்கிவிட்டாள் அம்மானே!

எப்பிறவி ஆனாலும்
எங்கெங்கு வாழ்ந்தாலும்
கொப்புடைய செவியாளைக்
கும்பிடுவேன் அம்மானே
கொப்புடைய செவியாளைக்
கும்பிடுமோர் காலம்வரை
இப்பிறவி அன்றி இனிப்பிறவேன் அம்மானே!

'மாங்காடு ஸ்ரீ காமாட்சி மகிமை'யைப் பற்றி ஒரு நூல் 2 ரூபாய் விலையில் வெளிவந்திருக்கிறது. பக்திப் பரவசமூட்டும் இந்த நூலை வெளியிட்டவர்கள் அநுராகம், 54, பாண்டி பஜார், சென்னை-17.

இந்த நூலைப் படித்ததும் எனக்குத் தோன்றிய எண்ணம்தான் மேலே கண்ட கவிதை.

- கண்ணதாசன்

# சிக்கன் 65





ஜே.வி.நாதன்

கையில் ஒரு சூட்கேஸுடன் விடுவிடென்று ஓர் ஆசாமி அலுவலகத்தினுள் நுழைவதைப் பார்த்ததும் ரங்காச்சாரிக்குக் கோபமான கோபம் வந்தது.

''யார் இந்தக் காட்டான்?''

தூக்கிவாரிப் போட்டது ரங்காச்சாரிக்கு. திறந்து கிடந்த ஆபீசில் 'எதுவோ' நுழைந்ததுபோல் நுழைந்ததும் இல்லாமல் என்னையே யாரென்று கேட்க இந்த ஆளுக்கு எத்தனை துணிச்சல்?

''நான் யாருங்கிறது இருக்கட்டும்... முதலில் நீங்க யார்னு சொல்லுங்கோ! இன்னிக்கு ஞாயிற்றுக் கிழமை. ஆபீஸ் லீவு. என்ன காரியம்னாலும் நாளைக்கு ஒர்க்கிங் டேஸ்ல வந்தாத்தான் ஆகும். தெரியறதா?''

''இந்த ஆபீசுக்குப் புதுசா வந்திருக்கிற ஹெட்க்ளார்க் நான்தாம்பா...'' – வந்தவர் 'வெடிகுண்டு' வீசினார்.

ஒருகணம் திக்கு முக்காடிப் போன ரங்காச்சாரி நாவைக் கடித்துக் கொண்டு கையை உதறினான். பதறினான். ''வெரி ஸாரி ஸார்!... என்னை மன்னிக்கணும்... தெரியாம...''

''பரவாயில்லே... பரவாயில்லே...'' – அவர் அங்கிருந்த நாற்காலியில் தாமே அமர்ந்து கொண்டார்.

ரங்காச்சாரி உடம்பைப் பணிவாக வளைத்துக் கொண்டான். கைகளை மார்புக்குக் குறுக்கே பவ்யமாகக் கட்டிக் கொண்டான்.

''என் பேர் ரங்காச்சாரி ஸார்...''

''ம்... மிஸ்டர் ரங்காச்சாரி! இந்த ஊரில் நல்ல வீடா வாடகைக்குத் தேடியாகணும்..''

''அந்தக் கவலையே உங்களுக்கு வேண்டாம் ஸார்! உங்களுக்கு எத்தனை ரூபாயில் எத்தனை அறைகள் இருந்தால் பரவாயில்லேன்னு சொன்னேள்னா...''

''மிஸ்டர் ரங்காச்சாரி, அதெல்லாம் நிதானமாய்ப் பேசிக்கலாம். முதல்லே நான் டிபன் சாப்பிடணும். பசி உயிர் போகுது. இங்கே பியூன் யாருமில்லையா?''

''நீங்க மேலே ரூமுக்குப் போங்க ஸார். ஒரு நிமிஷத்துல வந்துடறேன்...''

பரபரப்பாகத் திரும்பி வாசல் பக்கம் பாய்ந்தான் ரங்காச்சாரி.

தெருக்கோடி டீக்கடை பெஞ்சில் அமர்ந்து சூடாக அரசியலை அலசிக் கொண்டிருந்தான், பியூன் ராமாவதாரம். பக்கத்தில் சென்று இரண்டு மூன்று முறை சத்தம் போட்டு அழைத்தபிறகுதான் அவன் ரங்காச்சாரியைக் கவனித்து எழுந்து வந்தான்.

''ராமாவதாரம்! நம்ம டைகருக்குப் பதிலாப் போட்ட புது ஹெட்க்ளார்க் மதுரையிலிருந்து வந்துட்டாரய்யா. நம்ம ஆபீஸ் மாடியில்தான் தங்கறார். டிபன் வேணும்னார்... உன்னைத் தேடிண்டு வந்தேன். போய் ஆரியபவன்ல வாங்கிண்டு வந்துடேன்...'' – ரங்காச்சாரி ரூபாயை எடுத்து நீட்டினான்.

ரங்காச்சாரி மீண்டும் அலுவலகத்துக்கு வரும்போது மனம் பூரிப்பாக இருந்தது. விடுமுறை 'டர்ன் டியூட்டி'யில் தன்னை அன்றைக்குப் போட்டிருந்ததற்காக ரொம்ப சந்தோஷப் பட்டான். 'இந்தச் சந்தர்ப்பத்தை நன்ருகப் பயன்படுத்திக் கொண்டு புது ஹெட் கிளார்க்கிடம் நல்ல பெயர் எடுக்க வேண்டும். எவ்வளவு செலவானுலும் அவரை ப்ரீதி செய்து நல்லுறவு வைத்துக் கொள்ள வேண்டும். பழைய ஹெட்கிளார்க் காலத்தில் பட்ட துயரெல்லாம் போதும். அந்த அக்கவுண்டண்ட் ரத்தினசாமி என்ன ஆட்டம் போட்டான்... பாவி! அவனைப் பற்றி முன்கூட்டியே இந்த ஹெட்கிளார்க்கிடம் சொல்லி வைத்துவிட வேண்டும்...'

புது ஹெட்கிளார்க் சுப்பராமன் அலுவலக மாடியறையில் 'ஹிந்து' படித்துக் கொண்டிருந்தார்.

''டிபனுக்கு நம்ம பியூனை அனுப்பியிருக்கேன் ஸார். அஞ்சு நிமிஷத்துலே வந்துடுவான்...'' என்று பணிவாகச் சொன்னுன்.

''வரட்டும். வரட்டும். உட்காருங்க மிஸ்டர் சாரி. நான் இந்த ஊருக்குப் புதிசு. இங்கே நம் ஆபீஸர் எப்படிப்பட்டவர். மற்ற ஸ்டாஃப் எல்லாம் எப்படின்னு சொல்லுங்களேன் — முன்கூட்டித் தெரிஞ்சுக்கிட்டு அவங்களோட பழகறது சுலபமா இருக்கும்...''

ரங்காச்சாரிக்கு முகம் மலர்ந்தது. 'அடடா! இப்படி ஒரு சந்தர்ப்பத்துக்குத்தானே காத்திருந்தோம்...' என்று மனசுக்குள் பூரித்துப் போனுன். ரொம்பவும் விஸ்வாசமாகப் பேசுவதுபோல் முகத்தை வைத்துக் கொண்டு சொன்னுன்:

''ஸார்! நீங்க வந்ததும் வராததுமா சொல்றேனேன்னு தப்பா நெனச்சிண்டுடப்படாது. நம்ம பழைய ஹெட்கிளார்க் ரெண்டு கையாலும் கூசாமக் கேட்டு வாங்கிச் சம்பாதிச்சார் சார். வ. உ. சி. நகர்லே வாடகைக்குக் குடிபோன வீட்டையே விலைபேசி வாங்கிட்டார்னு பார்த்துக் கோங்களேன்!''.

''ஸோ இட்?'' ஹெட்கிளார்க் வியப்பைக் காண்பித்தார்.

''எஸ் ஸார்! மனுஷ்யர் பணம் பணம்னு அலேவார். இங்கே நம்ம ஆபீஸில் அக்கவுண்டண்ட் ரத்தினசாமின்னு ஒரு ஆள். அவன் தான் ஸார் பழைய ஹெட்கிளார்க்குக்கு உள்கை. இவர் பேரைச் சொல்லி ஒவ்வொரு ப்ளு பிரிண்ட் அப்ருவலுக்கும் அவன் லஞ்சம் வாங்குவான் ஸார். ரெண்டு பேரும் பெர்சண்டேஜ் பிரிச்சுக்குவாங்க. நம்ம ஆபீஸர் வெளுத்ததெல்லாம் பால்னு நினைக்கிற அப்பாவி ஸார்... நீட்டின இடத்தில் கையெழுத்து போடுவார்...''

''அடேடே... நீங்க சொல்றதைப் பார்த்தால் அக்கவுண்டண்ட் ரொம்ப மோசமான ஆள் போலிருக்கே?...''

ரங்காச்சாரி தனக்கே சபாஷ் போட்டுக் கொண்டான்.

புது ஹெட்கிளார்க் தன் பேச்சைக் கேட்பதிலிருந்து தான் எதிர்பார்க்கும் பலன் இருக்கும் என்று சந்தேகமறத் தோன்றிற்று ரங்காச்சாரிக்கு.

வாசலில் நிழலாடியது.

''கும்பிடறேன் ஐயா!... நான்தானுங்க ராமாவதாரம். இந்த ஆபீஸின் ஸீனியர் பியூன்'' என்று சொல்லியபடியே உள்ளே வந்து டிபன் பொட்டலங்களைப் பணிவாக மேசையில் வைத்தான் ராமாவதாரம். ஆப்பிள்களைக் கட்டியிருந்த பார்சலைத் தனியே ரங்காச்சாரியிடம் நீட்டினுன்.

எட்டு இட்டிலிகளையும், நெய் ரவாவையும், பூரி மசாலாவையும் சுபஸீகரம் பண்ணி 'ஏவ்...வ்...' என்று ஓர் ஏப்பம் விட்டார் சுப்பராமன்.

ரங்காச்சாரி பியூனிடம் காப்பி வாங்கி வருமாறு ஜாடை காட்டினுன்.

''காப்பியா, டீயா ஸார்?'' என்று இளம் பிய பியூனிடம் ''காப்பிதான். இரு. டிபனுக்கும் காப்பிக்கும் பணம் எடுத்துத் தர்றேன். அப்படியே ரெண்டு சிகரெட்டும் தீப்பெட்டியும் வாங்கிட்டு வந்துடு...'' என்று சொல்லியபடி எழுந்தார் சுப்பராமன்.

ரங்காச்சாரி துடித்து விட்டான். ''நன்னுருக்கு ஸார் நியாயம், நீங்க காசு தர்றதாவது?... அசலூர் வந்து மொத மொதல்லே வந்திருக்கேள். நானே எல்லாத்துக்கும் பணம் கொடுத்தாச்சு... இந்தா ராமாவதாரம்! நீ வர்றச்சே அங்கப்பன் பெட்டிக் கடையில் என் பேரைச் சொல்லிச் சிகரெட் ஒரு பாக்கெட்டாவே வாங்கிண்டு வந்துடு... காப்பியும் நன்னுப் போட்டு வாங்கிண்டு வா, என்ன?..''

''சரி ஸார்!''

''எல்லாம் உங்க ட்ரீட்டா?... எனக்கு இதெல்லாம் பிடிக்காது மிஸ்டர் ரங்காச்சாரி. இருந்தாலும் நீங்க இத்தனை அன்பா சொல்றப்ப தட்ட முடியலே...''

''என்ன ஸார், பெரிய ட்ரீட்? மனுஷாளோட அன்புதான் ஸார் முக்கியம்..'' ரங்காச்சாரி திரும்பி ஆப்பிள் பொட்டலத்தை எடுத்துப் பவ்யமாக நீட்டினுன்: ''மொத மொதல்லே பெரியவாளைப் பார்க்கறச்சே வெறுங் கையோடு பார்க்கப் படாதும்பா. இது என்னோட சின்ன அன்பளிப்பு...''

---

பையன்: வலது கை கொடுப்பது இடது கைக்குத் தெரியாது, எங்கப்பாவுக்கு.

பெரியவர்: வள்ளலோ?

பையன்: இல்லே. குஸ்தி பயில்வான்.

வெ. சீதாராமன்:





# கல்கி

1979 மார்ச் 4
காளயுக்தி மாசி 20
மலர்: 37 இதழ்: 31



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

''என்னது?...''—பிரித்துப் பார்த்த ஹெரட்டினார்க், ''அடேடே ஆப்பிளா எனக்கு இது பிடிக்கும்னு உங்களுக்கு எப்படித் தெரியும் மிஸ்டர் சாரி?... ரொம்பத் தாங்க்ஸ்...'' என்றார்.

நறுக் நறுக்கென்று ஓர் ஆப்பிளைப் பற்களால் கடித்துச் சுவைக்கத் தொடங்கினார் சுப்பராமன்.

சற்றுமுன் அவர் சாப்பிட்ட டிபன் தொண்டையைத் தாண்டி உணவுக் குழலில் இறங்கியிருக்கக் கூட முடியாத நேரத்தில் பகாசுரன் மாதிரி ஆப்பிளையும் கடித்து விழுங்குகிறாரே — என்று ரங்காச்சாரி மலைப்புடன் அவரைப் பார்த்து நின்றான்.

அலுவலகம், மறுநாள்—

புது ஹெரட்டினார்க் அன்று பணியில் சேர்ந்தார். ஆபீஸ் சுறுசுறுப்பாக இயங்கியது. புதியவரை ஆழம் பார்க்கிறவரை அந்தச் சுறுசுறுப்பு இருக்கும்.

இடைவேளைக்குச் சற்றுமுன் ரங்காச்சாரி ஹெரட்டினார்க் அறைக்குச் சென்றான்.

''வாங்க மிஸ்டர் சாரி. உங்களைத்தான் இப்ப நினைச்சேன், நீங்களே வந்துட்டீங்க. இன்னிக்குக் கோழி பிரியாணி சாப்பிடணும்னு ஒரு ம.:க்கை. இங்கே நல்ல மிலிடெரி ஓட்டல் ஏதாவது இருக்கா?...'' என்று வினவினார் ஹெரட்டினார்க் சுப்பராமன்.

''ஹி... ஹி, எனக்குத் தெரியாது... இருந்தாலும் நம்ம பியூனைக் கேட்டுச் சொல்றேனே—'' அசடு வழிந்தான் ரங்காச்சாரி.

''அடேடே! பிரியாணி ஓட்டலைப் பத்தி உங்ககிட்டே போய்க் கேட்கிறேன் பாருங்க. சரியான முட்டாள் நான்!'' சிரித்தார் ஹெரட்டினார்க்: சாரியும் சேர்ந்து பெரிதாகச் சிரித்துவிட்டு வெளியேறினான்:

ரங்காச்சாரி வெளியே வந்து பியூன் ராமாவதாரத்தைக் கூப்பிட்டு ரகசியமாக விஷயத்தைச் சொல்லிப் பத்து ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினான்.

''பத்து ரூவா எந்த மூலைக்கு ஸார்? குருமா, வறுவல், மட்டன் சாப்ஸ் எல்லாம் வாங்கினாத்தான் ஸார் நல்லாயிருக்கும். இன்னும் பத்து ரூபா கொடுங்க. அதுக்குள்ள சமாளிக்கப் பாக்கிறேன்....''

அழாக்குறையாகத் தன்னிடமிருந்த கடைசிப் பத்து ரூபாய் நோட்டையும் ராமாவதாரத்திடம் எடுத்துக் கொடுத்தான் ரங்காச்சாரி. மாதத்தின் சொச்ச நாட்களை ஓட்டுவதற்கு யாரிடமாவது இனி கடன் வாங்கினால்தான் முடியும்.

பிற்பகல் அலுவலகம் தொடங்கிச் சற்றைக்கெல்லாம் ஒரு ஃபைல் பற்றிச் சந்தேகம் கேட்க ரங்காச்சாரி ஹெரட்டினார்க் அறைக்குப் போனபோது, உள்ளே அக்கவுண்டண்ட் ரத்தினசாமியின் குரல் கேட்கவே, தயங்கி நின்றான்.

''உங்களுக்கு என் சின்ன அன்பளிப்பு ஸார்!'' — இது அக்கவுண்டண்டின் குரல்.

''அடேடே, நல்லா இருக்கே! பார்க்கர் பேனாவா...? இது எனக்குப் பிடிக்கும்னு எப்படிக் கரெக்டா கண்டுப்பிடிச்சீங்க, மிஸ்டர் ரத்தினசாமி? ரொம்ப நல்லாயிருக்கு. ஆனா, இந்தமாதிரி பிரஸெண்டேஷன் அது இதெல்லாம் எனக்குப் பிடிக்கவே பிடிக்காது. இருந்தாலும் நீங்க அன்போட கொடுக்கறப்ப வேண்டாம்னு சொல்றது சரியில்லே... அது சரி! நீங்க ப்ளூ ப்ரிண்ட் அப்ரூவலுக்கு பார்ட்டிகள்கிட்டே பணம் டிமாண்ட் பண்றீங்களாமே?''

''யார் ஸார் சொன்னா?...''

''யார் சொன்னால் என்ன? பழைய ஹெரட்டினார்க்குக்குக் கொடுத்த பர்சண்டேஜ்ல எனக்குக் குறையப்படாது. தெரிஞ்சுதா?''

''கூட்டியே கொடுத்துடறேன் ஸார்... சரிதானே?...''

''அப்புறம்... இங்கே ரங்காச்சாரின்னு ஒரு அசடு ஸ்டோர்ஸ் செக்‌ஷன்ல இருக்கே, சரியான பொறாமை பிடிச்ச இறுக்கன். அவன் உங்களைப்பத்தி, பார்ட்டி தொடர்புகளைப் பத்தியெல்லாம் சொல்லி வயிறு எரியறான்... இனிமே அவன் நாலெட்ஜுக்குத் தெரியாம டிரான்ஸாக்‌ஷனை வெளியில் வெச்சுக்குங்க. என்ன?''

''ஓ. கே. ஸார்!''

ரங்காச்சாரியின் உடல் வெடவெடவென்று நடுங்கியது. அறை வாசலில் இன்னும் காத்து நிற்கப் பிடிக்காமல், தளர்ந்து தன் இருக்கைக்குத் திரும்பினான். ஃபைலைத் தூக்கி மேசையில் போட்டான். அசடு. பொறாமை பிடிச்ச இறுக்கன்... யார் நானா? வயிறு எரியற ஆசாமி நானா?... அட கடவுளே!...

ஹெரட்டினார்க்கின் அறையில் கேட்க நேர்ந்த உரையாடல் திரும்பத் திரும்ப அவன் காதுகளில் ஒலித்தது. உடல் திடுமெனப் பலஹீனமாகிவிட்ட உணர்ச்சி, பசி மயக்கம், பிரமை — தலைசுற்றல்... இவற்றினூடே திடீரென்று கோழி ஒன்று தலையைச் சிலிர்த்துக் கொண்டு அவன் வயிற்றிலிருந்து குரல் கொடுத்தது.

**அத்தியாயம் 19**

**வை**த்தியலிங்கத்துக்கு மாரடைப்பு வந்தும் அவர் தெய்வாதீனமாகப் பிழைத்து விட்டார். 'முதல் அட்டாக் இலேசாகத்தான் வந்திருக்கிறது. இரண்டாவது மூன்றாவது இருதயத் தாக்குதல்கள் நேராமல் கவனமாக இருக்க வேண்டும்' என்பது வைத்தியலிங்கம் உட்பட அனைவருக்கும் புரிந்தது. டாக்டரும் தெளிவுபடுத்தி விட்டார்.

பத்துப் பதினைந்து தினங்கள் நர்ஸிங் ஹோமில் இருந்து விட்டுத் திரும்பிய பிறகு ஒருநாள் தனபாக்கியம் அவர் அருகே கட்டிலில் அமர்ந்து நெற்றியைத் தட்டிக் கொடுத்தபடி கேட்டாள்:

''ஏங்க, உடம்பு இப்ப எப்படி இருக்கு?''

''என் வயதுக்கேற்ற உடம்பா இருக்கு'' என்றார் வைத்தியலிங்கம். இதுவரை ஐம்பத்தெட்டிலேயும் முப்பத்தெட்டு வயதுக்காரன் மாதிரி இருந்தேன். இரண்டு வாரங்களிலே இருபது வயசு கூடின மாதிரி இருக்கு!''

''இப்படி இருக்கும்போது ஆபீஸுக்குப் போகணும்னு துடிக்கிறீங்களே, நியாயமா?''

''பின்னே என்ன பண்றது? நிர்வாகத்தை யார் கவனிக்கிறது?''

''ஏன் சத்யா இல்லையா? பார்த்துக்கறான்.''

''நிர்வாகம் பண்ண அறிவோ ஆற்றலோ தனக்கு இருப்பதாக இன்னும் அவன் நிரூபிக்கலே. அனுபவமும் போதிய அளவு ஏற்படலே.''

''பொறுப்பைக் கொடுத்தால் தன்னால் அறிவு, ஆற்றல், அனுபவம் எல்லாம் வரும். நான் சொல்றதைக் கேளுங்க.''

''நீ சொல்றதைக் கேட்பதா? சரிதான், முப்பத்திரண்டு வருஷமா அதைத்தானே செய்துக்கிட்டிருக்கேன் நான்!''

''கேலி இடக்கட்டும் எனக்கு ஒரு வரம் கொடுங்க.''

''என்ன வரம் பாக்கியம்?''

''பூவோடும் பொட்டோடும் உங்க மடியிலே தலை வைச்சு நான் கண்ணை மூடணும்'' என்ற பாக்கியம் தாலியை எடுத்துக் கண்ணில் ஒற்றிக் கொண்டாள்.

நெகிழ்ந்து போன வைத்தியலிங்கம் அவள் கரத்தைப் பற்றினார்: ''அப்படி ஒரு வரத்தை நான் எப்படித் தர முடியும்? அது என் கையிலா இருக்கு? பகவானைப் பிரார்த்தனை பண்ணு'' என்றார்.

''அதைத்தான் தினமும் செய்துக்கிட்டிருக்கேனே. ஆனா அத்துடன் உங்க ஒத்துழைப்பும் தேவையாச்சே. நீங்க அதிகமாக உடம்பை அலட்டிக் கொள்ளக் கூடாது. ஓய்வா இருக்கணும்னு டாக்டர் சொல்லியிருக்கார்.''

''விஷயத்தைத் தெளிவாகச் சொல்லேன், பாக்கியம். சத்யாவை மானேஜிங் டைரக்டராக்கிடணும். நான் வீட்டிலேயே கொலு இருக்கணும். இதுதானே நீ கேட்கிற வரம்?''

''ஒருசமயம் நீங்களே சொல்லலியா, 'கம்பெனியே அவனுதுதானே? அவன்தானே நடத்தணும், அவன் சம்பளத்தை நானும் என் சம்பளத்தை அவனுமா எடுத்துக்கறோம்; அட்வைஸரா மட்டும் இருந்து ஒதுங்கிக்கறேன்' என்றெல்லாம் பேசலியா?''

''சொன்னேன். ஆனா அதன் பிறகு அவன் ஒழிக கோஷம் போட்டதெல்லாம் உன் காதில் விழுந்ததில்லையா? விழுந்ததா இல்லையா?''

அவர் உரக்கப் படபடப்புடன் பேசியதில் பயந்து போனாள் தனபாக்கியம். ''கோபப்படாதீங்க! அதீத உணர்ச்சிகளுக்கு நீங்க இடம் தரக் கூடாதுன்னு டாக்டர் சொல்லியிருக்கார்'' என்றாள். பிறகு, ''வாக்குவாதம்னு வந்தப்போ அப்பா, மகன் இரண்டு பேர் குரலும் உசந்து போச்சு; வார்த்தைகளும் மாறிப் போச்சு. இந்த மாதிரி நேரும்னு சத்யாவே கொஞ்சமும் எதிர்பார்க்கலே. நீங்க அவனை முதலாளி மகனுக்குரிய மதிப்புத் தராமல் சாதாரணத் தொழிலாளியை விடக் குறைந்த சம்பளம் கொடுத்து வேலைக்கு வைத்



தநில் அவனுக்கு வருத்தம். பாதி கோபமாகவும் பாதி விளையாட்டாகவும் அன்று ஒழிக கோஷம் போட்டான். இப்படி விபரீதமா முடியும்னு தெரிஞ்சிருந்தா செய்திருப்பானா? அப்புறமா அவன் ரொம்ப வருத்தப்பட்டு என்னிடம் கண்ணீர் விட்டு அழுதான்!''

''நிஜமாகவா, பாக்கியம்.?''

''சத்தியமா!''

''நானும் தப்பு செய்துட்டேன், பாக்கியம். அவனுக்குத் தர வேண்டிய மதிப்பைத் தராமல் ரொம்ப நியாய புத்தியோடும் கண்டிப்புக் கறாராகவும் இருப்பதாக நினைச்சு ரொம்ப மட்டமாக நடத்திட்டேன். அவனுக்கு நானே பிஸினஸைக் கற்றுத் தந்திருக்கலாம். அருள்ராஜ் ஜிமே போட்டேன். டீஸன்ட்டா ஒரு சம்பளம் கொடுத்திருக்கலாம், செய்யாமல் போனேன். அவன் தன் கௌரவமே பாழாகிவிட்டதாக நினைச்சுட்டான். அவன் மனசே அதனால் கோணலாகிப் போச்சு. ஆனந்தோடு சேர்ந்து கெட்டுப் போனான். என்னைப் பொறுத்த மட்டில் தவற்றைத் திருத்திடறேன். இனி சத்யாவுக்குத்தான் கம்பெனியிலே எல்லாப் பொறுப்பும்! சரிதானே?''

''நீங்க கோபப்படக் கூடாது; ஆபீஸுக்குப் போகவும் நினைக்கக் கூடாது. அங்கே ஏகப்பட்ட பிரச்னைகளைச் சந்திக்கும் போது ஒரே நெர்வஸ் டென்ஷனா ஆயிடும்!''

''உன் கோரிக்கையை ஏற்பதில் எனக்கு மகிழ்ச்சிதான் பாக்கியம். இருபது வருஷமா தொழில் முன்னேற்றம், சம்பாத்தியம்னு சதா கவலைப்பட்டு நான் வாழ்க்கையை ரசிக்கவே மறந்துட்டேன். அதற்கு எனக்கு நேரமே இல்லாமல் போயிட்டுது. இப்ப எனக்கு ஓய்விருக்கும். இனிமே நான் சூரியோதயத்தின் அழகைக் கண்டு ரசிப்பேன். மழைச் சாரல் எழுப்பும் சங்கீதத்தைக் கேட்பேன். கம்பன் கவிதையை அனுபவிப்பேன். சிறந்த ஓவியங்களைப் பார்த்து மகிழ்வேன். நல்ல கச்சேரிகளைச் செவி குளிரக் கேட்பேன். இனிமேல் உன்னுடைய அழகைக் கூட நின்று நிதானமாகப் பார்த்துச் சுவைக்க, எனக்கு அவகாசமிருக்கும்!''

இப்படிக் கூறியபடியே வைத்தியலிங்கம் மனைவியின் கரத்தைப் பற்றினார். புளகாங்கித



மடைத்திருந்த பாக்கியம் கையை விடுவித்துக் கொள்ள முயலவில்லை.

''என்ன மிஸ்டர் வைத்தியலிங்கம்! வர லாமா?'' என்ற டாக்டரின் குரல் கேட்டதும் தான் திடுக்கிட்டுத் தன்னை விடுவித்துக் கொண்டு எழுந்து நின்றாள் தனபாக்கியம்.

டாக்டர் குமரன் உள்ளே வந்தபடியே நட்பு தந்த உரிமையோடு கேட்டார்: ''என்ன இன்னொரு ஹனிமூன் பிளான் பண்ணிண் டிருக்கேளா?''

''எங்க முதல் ஹனிமூனே இனிமேல்தான் டாக்டர்'' என்றார் வைத்தியலிங்கம். ''என்னு கல்யாணமானதும் நாங்க தேன் நிலவுக்கே போகலே. அதற்கெல்லாம் எனக்கு நேர மிருந்ததே இல்லே. சதா உழைப்புத்தான். தொழிலகத்தின் முன்னேற்றம் பற்றிய சிந் தனைதான்!''

டாக்டர், வைத்தியலிங்கத்தைப் பரி சோதித்தபடியே சொன்னார்: ''டோண்ட் ஒர்ரி! வாழ்க்கையை அனுபவிக்க இன்னும் எத்தனையோ காலம் இருக்கு. கொஞ்ச நாளைக்கு ஓய்வா இருங்க. அப்புறம் உத்யோக வாழ்வோ, உல்லாசப் பொழுது போக்கோ, உடற்பயிற்சியோ, உணவுப் பழக்கமோ எதிலும் நிதானம் காட்டுங்க. அதோடு நான் சொல்கிற மருந்துகளையும் தவறாமல் சாப் பிட்டு வந்தால் நூறு வயசு இல்லாத போனு லும் எண்பதுக்குக் குறையாமல் வாழலாம். ஓ. கே., நான் வரட்டுமா?''

''இருங்க டாக்டர் ஒரு கப் காப்பி சாப் பிட்டுட்டுப் போகலாம்.''

''இமர் காப்பியா? டிகாக்ஷன் காப்பியா?''

''வீட்டிலேயே கொட்டை பதமா வறுத்து வைச்சிருக்கேன். புதுசா அரைச்சு, டிகாக் ஷன் இறக்கிக் கொண்டு வரேன்'' என்றாள் தனபாக்கியம்.

''அப்ப சரி, சாப்பிட வேண்டியதுதான்'' என்று உட்கார்ந்துவிட்டார் டாக்டர் குமரன். ''எங்கே போனாலும் இமர்க் காப்பி கொடுத்து டாக்டரின் நாக்கையே சாக அடிச்சுட றாங்க!''

''எனக்கும் ஒரு ஒன் பை டூ'' என்றார் வைத்தியலிங்கம்.

''நோ நோ! உங்களைப் பார்க்க வரவங்க ஒவ்வொருத்தரோடேயும் சேர்ந்து கம்பெனிக் காகக் காப்பி சாப்பிட்டுக் கிட்டே இருந்தா உடம்பு என்னத்துக்காகிறது?'' என்றார் குமரன்.

''காப்பியைத் தொடாம இருந்து நூறு வயசு வாழறதை விட, நல்ல காப்பியா சாப்பிட்டுக்கிட்டு எண்பது வயசு வாழ்ந்தா போதுமே டாக்டர்!''

''அது ஆரோக்கியமான உடம்பு உள்ளவங் களுக்குப் பொருந்தும். உங்க கேஸிலே ஏற் காது.''

''என்ன டாக்டர் இது? ஒன் பை டூ தானே கேட்கிறேன்? பிளீஸ்! பிளீஸ்! கம்பான் டாக் டர்! ஜேஸ் எஸ்!'' என்று கெஞ்சலாகப் பேசினார் வைத்தியலிங்கம்.

''சரி போனால் போகிறது. இந்த ஒரு தடவை மட்டும் அவருக்கும் கொடுங்க'' என்றார் டாக்டர் குமரன்.

''அவர் என்னையே ஒதுக்கி வைச்சாலும் வைச்சுடுவார், என் கைமணக்கும் சமைய லையோ காப்பியையோ அவரால் ஒதுக்கி வைக்க முடியாது!'' என்று பெருமையுடன் கூறியபடி உள்ளே சென்றாள் தனபாக்கியம்.

## அத்தியாயம் 20

இரண்டு காமிராக்கள், ஃப்ளாஷ்கள் சகிதம் யோகேஷ் வீட்டுக்குப் போய்ச் சேர்ந் தான் ஆனந்த்.

யோகேஷ் அப்போது வீட்டில் இருந்தார். பத்திரிகை நிருபர் என்று தமது காரியதரிசி வந்து அறிவித்ததும், இலேசான வியப்பும் ஆவல் குறுகுறுப்பும் எட்டிப் பார்க்க, காரி யாலய அறையைவிட்டு வரவேற்பு அறைக்கு வந்து சேர்ந்தார். ''என்ன விஷயம்? எந்தப் பத்திரிகையைச் சேர்ந்தவர் நீங்கள்?'' என்று கேட்டார்.

''நான் ஃப்ரீ லான்ஸர் ஸார்! பத்திரிகை களுக்கு எழுதுவதும் படம் எடுத்து அனுப்பு வதும் எனக்கு ஒரு ஹாபி'' என்றான் ஆனந்த்.

''அப்படியா? இது ஹாபி என்றால் தொழில் என்ன?''

''எங்கப்பா சேர்த்து வைத்திருக்கிற ஏராள மான சொத்தைக் கரைப்பதுதான்'' என் றான் ஆனந்த்.

யோகேஷ் திடுக்கிட்டார். அதை ரசித் தான் ஆனந்த். ''என்ன திகைச்சுப் போயிட் டீங்க? உண்மையாகத்தான் சொல்றேன்'' என்று கூறிச் சிரித்தான். ''ஐ கம் ஃப்ரம் எ வெரி ரிச் ஃபாமிலி. சிவானந்த் அண்டு சன்ஸ்னு கேள்விப் பட்டிருப்பீங்களே? அதிலே ஸன்கிறது பிரேமானந்த். அதாவது என் அப்பா. நான் மூன்றாவது தலைமுறை. தாத்தா பெயர்தான் எனக்கு. ஆனால் வித்தி யாசம் தெரியப் பெயரைச் சுருக்கி ஆனந்த்ன்னு வைச்சுக்கிட்டேன்.'' — இவ் வாறு குலப் பெருமையை விளக்கியபடியே கார் சாவிக் கொத்தை அவர் கண்ணில் படுகிற மாதிரி கரத்திலிருந்து பாக்கெட்டில் போட்டுக் கொண்டான் ஆனந்த்.

''யெஸ், யெஸ். காதுக்குப் பழக்கப்பட்ட பெயர்களாகத்தான் இருக்கு'' என்றார் யோகேஷ். ''இருந்தாலும் நீ சொத்தைக் கரைக்கிறதே காரியம்னு இருக்கலாமா?''

''என்ன ஸார்! கோடீசுவரரான நீங்களே இப்படிக் கேட்டால் நியாயமா? பணத்தைக் கரைப்பது என்பது அவ்வளவு சுலபமா என்ன? 'சொத்தே! கரைஞ்சு போ'ன்னு அது



ஒருவர்: என்னப்பா... பஸ் ஸ்டாப் கூரை மேலே ஏறி உட்கார்ந்து இருக்கே?...

மற்றவர்: மாடி பஸ்ஸில் ஏற ஆசை...!

''பீட்டிகேன்.''

மறைஞ்சுடுமா? ஓரளவுக்கு அதிகமாச் சொத்து சேர்ந்துட்டால் அது மேலே மேலே வளர்ந்துக்கிட்டுத்தான் போகுமேயொழியக் குறையாது. உங்களுக்குத் தெரியாதது இல்லையே! சொத்தை ஒழிச்சுக்கட்ட ரொம்ப சாமர்த்தியம் வேணும் ஸார்! எனக்கு அவ்வளவு திறமை போதாது.''

யோகேஷ், ''ஓஹோ ஹோ'' வென்று சிரித்தார். ''ரொம்ப வேடிக்கையாப் பேசறே தம்பி! ஐ லைக் யூ! தமாஷா பேசிய படியே மென்மேலும் பணம் பண்ணுவதிலே தான் நீ குறியாக இருப்பதையும் உணர்த்திட்டே! சரி, நீ வந்த விஷயத்தைச் சொல்லு!''

''நான் என் செல்வத்தைப் பற்றிப் பறைசாற்றிக் கொள்ள வரவில்லை. உண்மையில் உங்களைப் பேட்டி காணவும் வரலை. உங்க மகளை உங்க அனுமதி பெற்றுப் பேட்டி காணத்தான் வந்தேன். அவங்க உமன்ஸ் லிபரேஷன்லே ரொம்ப ஈடுபாடு உள்ளவங்க, இல்லையா? நல்ல மேட்டர் கிடைக்கும்னு தோணிச்சு. எந்தப் பத்திரிகைக்கு அனுப்பினாலும் உடனே பிரசுரிப்பாங்கங்கிற நம்பிக்கையும் இருக்கு.''

''அப்படியா? அவளையே வரச் சொல்கிறேனே'' என்றார் யோகேஷ். அவருக்குப் பெருமையாகவே இருந்தது. சற்று நேரத்தில் பிரமீளா அங்கே வந்து சேர்ந்தாள்.

''உட்காரும்மா'' என்றார் யோகேஷ். ''உன்னைத்தான் பேட்டி காண வந்திருக்கிறார் ஆனந்த்.''

''என்னையா? என்னை எதற்குப் பேட்டி காண்பது?'' என்று ஆச்சர்யத்துடன் கேட்டாள் பிங்கி.

''அப்பா சேர்த்து வைத்த சொத்தை எப்படிக் கரைப்பது என்று ஆனந்துக்குத் தெரியலையாம். உன்னைக் கேட்டால் சொல்லிக் கொடுப்பாய் என்றேன்!'' — யோகேஷ் பெரிய ஹாஸ்யத்தைக் கூறி விட்டதுபோல் சிரித்தார்.

ஆனந்த் அவருக்கு ஏமாற்றம் அளிக்காது தானும் சேர்ந்து சிரித்தான். பின்னர் சொன்னான்: ''என் அப்பாவும் தாத்தாவும் சேர்த்து வைச்ச சொத்துக்களை அழித்து ஒழிக்க முடியலை என்கிறதுக்காக நான் ஒன்றும் கம்யூனிஸ்ட்டா மாறிடப் போகிறதில்லை ஸார்! தொடர்ந்து முதலாளித்துவத்தின் முன்னேற்றத்துக்காகவே பாடுபடுவேன்!''

''தம்பி! நீ உணர்ந்து பேசுகிறாயோ, வேடிக்கையாகச் சொல்கிறாயோ தெரியாது! ஆனா நீ கூறுவதில் ஒரு தத்துவம் இருக்கு!''

''தெரியுமே! நான் பேசுவது எல்லாத்திலேயும் ஒரு தத்துவம் இருக்கும். தத்துவம் இல்லாத தத்துப்பித்துப் பேச்சே நான் பேசறதில்லை!'' என்றான் ஆனந்த்.

''அபரிமிதமான செல்வத்தில் உழல்கிறவர்களின் பிள்ளைகள்தாம் ஒன்று, உலகத்தை வெறுத்து ஹிப்பிகளாகிறார்கள். அல்லது செல்வத்தை வெறுத்து கம்யூனிஸ்ட்டுகளாகிறார்கள்'' என்றார் யோகேஷ். ''அமெரிக்காவிலேயே இது ரொம்ப சகஜம்.''

''அதெல்லாம் சுத்த ஹம்பக் ஸார்! ஒரு பாஸிங் ஃபேன்ஸி. சொத்தும் அதைக் கட்டிக்

*The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil weekly newspaper, are published, as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.*

FORM IV

1. *Place of Publication*: Madras
2. *Periodicity of publication*: Weekly
3. *Name of Printer*: V. Murali
   *Nationality*: Indian
   *Address*: 29/C, Shanthi Colony
   Anna Nagar
   Madras-600 040
4. *Name of Publisher*: V. Vaidyanathan
   *Nationality*: Indian
   *Address*: 25, D'Monte Colony
   Madras-600 018
5. *Name of Editor*: K. Rajendran
   *Nationality*: Indian
   *Address*: 1, Purushothama Mudaliar
   Lake Area Road
   Nungambakkam
   Madras-600 034
6. *Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital*: Bharathan Publications Private Limited 84/1-C, Race Course Road, Guindy, Madras-600 032

V. Vaidyanathan
*Publisher*

1-3-1979

காக்கிற முழுப் பொறுப்பும் தன் கையிலேயே வந்துட்டால் ஆள் அடியோடு மாறிப் போயிடுவான். அப்பாவிடம் நிறுவனம் இருக்கும் வரை தொழிலாளர் பக்கம் பேசுகிறவன் தன்னிடமே தொழிலகம் ஒப்படைக்கப்பட்டதும் தலைகீழா மாறிடுவான். ஆனால் நான் அப்படி டபுள் ரோல்லே நடிக்கிறவன் இல்லே. எனக்கு ஆரம்பம், மையம் முடிவு எல்லாம் முதலாளித்துவத்தின் முன்னேற்றம்தான்!''

''ஐ லைக் யூ! யூ ஆர் வெரி ஃப்ராங்க்!'' என்றார் யோகேஷ்.

''எனக்கு வேஷம் போடத் தெரியாது ஸார்! என் ஃப்ரெண்ட் ஒருத்தன் இப்படித்தான் — சத்யான்னு பேரு... உங்களுக்குக் கூடத் தெரிஞ்சிருக்கும்னு நினைக்கிறேன்...''

யோகேஷும் பிங்கியும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

''சத்யாவுக்கு என்ன?'' என்றாள் பிங்கி, சற்றுக் கடுமை தொனிக்க.

''என்னுடைய டியரெஸ்ட் ஃப்ரெண்ட் அவன். நான் அவனைக் குறை சொல்வதாகவோ புறம் சொல்வதாகவோ நினைக்காதீங்க. அவனிடம் சொன்னதையேதான் உங்களிடமும் சொல்றேன். 'ஏன்டா சத்யா!

## மேலட்டை

மேலட்டையில் உள்ள பெண்மணி "இன்னொரு கப் காப்பி சாப்பிடுகிறீர்களா?" என்று கேட்பது போலில்லே? ஒருவேளை,

"வன போஜனம் என்பதை விட 'பிக்நிக்' என்பதே உச்சரிக்க 'சிக்'காக இருக்கிறதென்றால் அப்படியே சொல்லுங்களேன், என்ன குடிமுழுகிப் போய்விடப் போகிறது?" என்கிறாரோ?

வண்ணப்படம் எடுத்தவர்: உத்ரா

---

உன் அப்பா நிர்வாகப் பொறுப்பில் இருந்து உன்னை அப்ரெண்டிஸ் மாதிரி நடத்திய போது நீ கோபப்பட்டுத் தொழிலாளர் பக்கம் சேர்ந்து அப்பாவுக் கெதிராகவே ஊர்வலம் போய்க் கோஷமும் போட்டே! இப்போ, உன் அப்பா உடம்பு முடியலேன்னு படுத்து உன்னிடமே நிர்வாகப் பொறுப்பை விட்டு விட்ட போது, தொழிலாளர்களை 'டாம் இட்', என்று திட்டறே! இது என்னடா நியாயம்?' என்றேன். நம்ப முடியாத அளவுக்கு ஆள் இப்போ அடியோடு மாறிட்டான்! ஆனா நான் அதிசயப்படலே. பணத்துக்கு இருக்கிற சக்தியையும், செல்வாக்கையும் சின்ன வயசிலேயே புரிஞ்சுக்கிட்டவள் நான்."

"சரி, நீங்க வந்த விஷயத்தைச் சொல்லுங்க" என்றாள் பிங்கி. சத்யா பற்றிய பேச்சைத் தொடர விரும்பாதவளாக.

"மாதர் சுதந்திரம் பற்றிச் சில நல்ல பாயிண்ட்ஸ் கொடுங்க. கட்டுரை எழுதறேன். அப்புறம் உங்களைப் படம் எடுத்துக்கறேன். இதிலே கலர் ஃபிலிம் இருக்கு: இதிலே பிளாக் அண்ட் ஒயிட்." இரண்டு காமிராக்களையும் தொட்டுக் காண்பித்து விட்டுத் தொடர்ந்து கூறினான் ஆனந்த்: "கலர் டிரான்ஸ்பேரன்ஸி கொடுத்தா அட்டைப் படத்திலே போட்டு கவர் பேஜ் ஸ்டோரின்னு என் கட்டுரையைப் பிரசுரிப்பாங்க. கவர் கேர்ல் ஸ்டோரின்னு கூடப் போடலாம். ஆனா கலர் படம் எடுக்க நீங்க இன்னும் கொஞ்சம் கலர் ஃபுல்லாகவும் கவர்ச்சிகரமாகவும் டிரெஸ் செய்துக்கணும். உங்களுக்குச் சொல்லிக் கொடுக்கத் தேவையில்லே. உமன்ஸ் லிப் பற்றிய வாசகம் ஏதாவது எழுதிய டி ஷர்ட் அணிந்து வாங்களேன்! 'வி ஆர் லிபரேட்டட்'ன்னு எழுதியிருக்குமே, அந்த ஷர்ட் இருக்கா? இங்கே தோட்டத்திலே இரண்டு ஸ்னாப் எடுத்துக்கலாம், அப்புறம் மஹாபலிபுரம் கூட போகலாம். அந்த ஸெட்டிங்லே நாலு படம் எடுத்துக்கலாம்..."

"மிஸ்டர் ஆனந்த்!" என்று இடைமறித்தாள் பிங்கி. "மாதர் விடுதலை பற்றி என் கருத்து வேணும்னு கேட்டீங்க இல்லையா? சொல்றேன்: இப்போ என்னைக் கவர்ச்சிகரமாப் படம் எடுத்து வாரப் பத்திரிகையின் அட்டைப் படத்தில் பிரசுரிக்கலாம் என்கிறீங்க; எதுக்கு? பத்திரிகையின் அட்டைப்படம் ஒரு ஸெல்லிங் பாயிண்ட். அட்டைப் படம் ஒருவனைக் காசு கொடுத்துப் பத்திரிகை வாங்கத் தூண்டணும். எனவே அட்டைப் படம் கவர்ச்சிகரமாக அமையணும். இது தானே உன்நோக்கம்? ஆக மொத்தம் பத்திரிகையை விற்பதற்கு முன்பாகவே எங்களை — அதாவது எங்களைப் போன்ற இளம் பெண்களின் எழிலுருவங்களை — பத்திரிகைக் காரங்க விற்கறாங்க. எங்களையே விற்றால் என்ன, எங்கள் உருவங்களை விலை பேசினால் என்ன? பத்திரிகை உலகில் இந்த மாதிரி ஒரு சூழ்நிலை ஏற்பட்டுப் போனதையே நான் வெறுக்கறேன். பெண் குலம் முதலில் இந்த அடிமைத் தனத்திலிருந்து விடுதலை பெறணும்னு ஆசைப் படறேன். அதனாலே உங்க காமிராவுக்கு போஸ் கொடுக்க நான் தயாராயில்லே. நீங்க போயிட்டு வரலாம்!"

வந்திருப்பவன் ஏதாவது தப்பாக நினைக்காமல் இருக்க வேண்டுமே என்று யோகேஷ் கவலை அடைந்தார்.

ஆனால் ஆனந்த் அளவற்ற உற்சாகமடைந்தவன் போல் துள்ளி எழுந்தான். யோகேஷின் கரங்களைப் பற்றிக் குலுக்கினான். "ஐ மஸ்ட் கன்கிராஜுலேட் யூ! இப்படி ஒரு மகளைப் பெற்றதற்காக!" என்றான். பின்னர் பிங்கி பக்கம் திரும்பி, "உங்களைப் பாராட்ட எனக்கு வார்த்தைகளே அகப்படவில்லை. இப்போ நீங்க சொன்னதை எழுதிப் பத்திரிகைக்கு அனுப்ப எனக்கு அனுமதி கொடுத்தால் போதும்" என்றான்.

ஆனந்த் கோபப்பட்டும் ஏமாற்றமடைந்தும் வெளியேறுவான் என்று எதிர்பார்த்திருந்த பிரமீளா அயர்ந்து விட்டாள். தான் கூறிய கருத்தை எழுதிப் பத்திரிகைக்கு அனுப்ப அவனுக்கு அனுமதி தந்ததோடு தான் தன் தகப்பனாருடன் சேர்ந்திருப்பது போலும் தனித்திருப்பது போலும் சில புகைப்படங்களை பிளாக் அண்டு ஒயிட் ஃபிலிமில் எடுத்துக் கொள்ளவும் அனுமதித்தாள். படங்கள் எடுக்கும் போதே ஆனந்த் சொன்னான்: " 'மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம், வைய வாழ்வு தன்னில் எந்த வகையிலும் நமக்குளே' என்று பாரதி பாடி வைச்சானே, அதன் முழு அர்த்தமும் இப்பத்தான் — பிங்கியோடு பேசிய பிறகுதான் — எனக்குப் புரிய வரது! கட்டுரைக்குத் தலைப்புக் கூடத் தோன்றி விட்டது: "அட்டைப்படக் கிழவி!" அப்புறம் முதல் பாரா:- " " 'அட்டைப் படத்தில் கிழவிகளைப் போடட்டுமே' என்கிறார் மாதர் விடுதலைக்குப் போராடும் பிரமீளா!" இப்படி ஆரம்பித்து ஜமாய்த்து விடுகிறேன் பாருங்கள்!"

பிங்கி கலகலவென்று சிரித்து விட்டாள். விடைபெறு முன்னர், "மறுபடியும் உங்களைப் பார்க்க வருவேன்" என்றான் ஆனந்த். "ஏதாவது சந்தேகம் தோன்றினால் கேட்டுப் போவேன். அப்புறம் கட்டுரை பிரசுரமானதும் அந்தப் பத்திரிகையின் இரு பிரதிகளுடன் வந்து பார்ப்பேன். வரலாமில்லையா?"

"ஓ, பேஷாக!" என்றாள் பிங்கி.

"வெல்கம்" என்றார் யோகேஷ்.

பிங்கியை நோக்கி ஒரு புன்னகையை வீசி விட்டு காரில் ஏறினான் ஆனந்த். "அடுத்த தடவை வரும் போது சத்யாவைப் பற்றி இன்னும் சில உண்மைக் கதைகள் சொல்கிறேன்!" என்று போகிற போக்கில் அவன் சிரித்துக் கொண்டே கூறியது, கார் கண்ணுக்கு மறைந்து வெகு நேரமாகிய பின்னரும் பிங்கியின் மனத்தை உறுத்திக் கொண்டிருந்தது.

(தொடரும்)

ஷட்டமேனை

# கலைஞர்கள் விவாதத்தில் தலையிடும் ரசிகன்!

● பாலமுரளி—பாலசந்தர் வம்புச் சண்டையில் ரசிகனுகிய நான் ஏன் தலையிடக் கூடாது? பிறரைக் கணிக்கும் போது இருக்கும் நுல்லியமான ஞானம், தான் வீணை இசைக்கும்போது பாலசந்தருக்கு இருக்கிறதா? வீணை கானத்திற்கு இயல்பான நயம், எளிமை, பாவம் இவைகளுக்கு ஒவ்வாத சாதனைகளும், யுத்திகளும் அவசியந்தானு?

பிறவி மேதையாகத் தோன்றி, உருவாகிய பாலமுரளி, ஒரு புறம் தியாகராஜ ஸ்வாமிகள் கைங்கர்யமும், மற்றொரு புறம் ஸ்வாமிகளின் கீர்த்தனைகளை சினிமா இசையுடன் இணைந்து parody செய்வதும், பிறர் நியாயமாய்க் குற்றம் சொல்லும்படி பாடுவதும் அவசியம் தானு?

மொத்தத்தில் இருவரும் புத்திசாலிகள். இசையில் ஈடுபடும் போது மட்டும் ஏனே வேண்டாத அம்சங்கள் தலையிடுகின்றன. எது எப்படி இருப்பினும், ஒருவர் மற்றவரைப் பிடித்து ஆட்டுவது அழகல்ல.

ஈரோடு — வி. வி. கிருஷ்ணன்

● ''ஒரு சத்தியத்தின் அழுகை'' கதையில் இவ்வுலகில் பணக்காரன் ஏழை என்ற இரண்டு சாதிதான் உண்டு என்பதையும் 'பணக்காரன் சாதி பார்க்காத போது... நாம... ஏழைங்க... சாதி பார்க்கலாமா?' என்ற சிந்தனைக்குரிய வினவையும் இந்நாட்டு மக்களுக்காக எழுப்பியுள்ள சு. சமுத்திரத்துக்கும் கதையைப் பிரசுரித்த ''கல்கி''க்கும் என் பாராட்டுக்கள்.

விருத்தாசலம் — திரு. அ. சந்திரசேகரன்

● வெகு நாட்களுக்குப் பிறகு ஒரு மிகச் சிறந்த சிறுகதை படித்த சந்தோஷம் ஏற்பட்டது — 'தான்' அவர்களின் 'அனுமதேய அம்ரர்' படித்தபொழுது. சு. சமுத்திரம் அவர்களின் 'ஒரு சத்தியத்தின் அழுகை'யும் மிகச் சிறப்பாக இருந்தது. ஆசிரியர்களுக்கு என் மனமார்ந்த பாராட்டுக்கள்.

சென்னை—40 — எஸ். விஸ்வநாதன்

● உங்களுடைய மூங்கில், திரிசூலம் பட விமரிசனங்களைப் படித்தேன். முன்னதை உயர்த்தியும் பின்னதைத் தாழ்த்தியும் எழுதியுள்ளீர்கள். திரிசூலம் கண்ணியமான குடும்பக் கதையினைக் கொண்டதாகும். மலையாளப் படங்களில் செக்ஸ் காட்சிகளுக்குப் பஞ்சமில்லை. கலைப்படம் என்ற பெயரில் பண்பாடுகளை மறந்து கண் துடைப்பு செய்கிருர்கள் மலையாளப் படவுலகினர்.

மூங்கில் மலையாளப் படத்தில் பெயருக்கும் படத்தின் கருவுக்கும் சம்பந்தமேயில்லை. செக்ஸ்தான் எஞ்சியுள்ளது.

வையாபுரி

● சாகித்ய அகாதமியின் பரிசு பெற்ற வல்லிக் கண்ணனைப் பாராட்டியதோடு, அப்பாராட்டுக்குக் காரணமான அவரது நூல் எங்கு கிடைக்கும் என்பதையும் வெளியிட்டு உங்களின் தனித்தன்மையை மீண்டும் நிரூபித்து விட்டீர்கள்.

விருத்தாசலம்—1 — ஜி. சாந்தாராஜ்

● தங்கள் வெறி — நெறி — பொறி தலையங்கம் எங்களை 'சரி'யென்றே ஒப்புக்கொள்ள வைக்கிறது. தங்கள் இதழின் தலையங்கமும், கார்ட்டூன்களும் வார இதழ்களில் முதலிடம் வகிக்கின்றன.

கிஷோர் குமார்

● தமிழகத்தில் தனி நபர் வழிபாடு எந்த அளவுக்குப் பொது மக்களைப் பாதிக்கிறது என்பதற்கு ஆதாரமான செய்தி ஒன்றை இன்றைய 'Economic Times' பத்திரிகையில் பார்த்தேன். 1974ல் அரசுத் துறையில் நிறுவப்பட்ட பூம்புகார் கப்பல் கழகம், இரு கப்பல்களை வாங்கியது. ஆனல் நிறுவப்பட்டது முதல் இன்றுவரை இந்தக் கழகம் நஷ்டத்தில் இயங்குகிறது. 1977—78 வரை மொத்த நஷ்டம் ரூபாய் 69 லட்சம். பொருளாதார ரீதியில் பார்த்தால் இந்தக் கப்பல்களை விற்றுவிட்டுக் கழகத்தைக் கலைப்பதுதான் விவேகம். நிபுணர்களும் இதை அறிவுறுத்தியிருக்கிறர்கள். அரசும் இந்தத் தீர்மானத்தை எடுத்தது. ஆனல் அந்தச் சமயம்தான் ஒரு 'ஞானேதயம்' தோன்றியது. கழகத்துக்குச் சொந்தமான கப்பல்களுக்கு 'பெரியார்' 'அண்ணு' என்று பெயரிட்டு இருக்கிறர்கள். அதனுல் இவைகளை விற்று, கப்பல் கழகத்தை மூடுவதென்று முடிவெடுத்தால் இது 'அரசியல் பிரச்னை'யாக உருவாகும் என்று அஞ்சுகிறர்களாம். அரசியல் லாபம் கருதி மக்களுடைய வரிப்பணம் நஷ்டமாக விடலாமா?

பம்பாய்—8 — எஸ். ராமதாஸ், எம். ஏ.

# அரசியல் லாபத்துக்காக வரிப்பணம் நஷ்டமாவதா?



✖ ரம்புதான் பழம்

# மனம் கவர்ந்த மலேஷியா-4

தோட்டம் ஏராளமாக இருக்கும்மலேஷியாவில் தண்ணீர் ஊற்ற அவர்கள் சிரமப்படுவதே இல்லை. தினம்தான் மழை பெய்து விடுகிறதே! அப்புறம் இவர்கள் ஏன் நீர் பாய்ச்ச வேண்டும்? தினமும் வெய்யிலும் உண்டு; மழையும் உண்டு. ஆக வருஷம் முழுதும் நாடு பச்சென்று இருக்கிறது.

மலேஷியாவைப் பல கோணங்களிலிருந்து பார்த்த எங்களுக்குக் கேரளாவைப் பார்ப்பது போன்ற உணர்வே உண்டானது. சில இடங்களில் கேரளாவோடு ஊட்டியும் சேர்ந்திருக்கிறது.

தெரு ஓரங்களில், வீட்டுத் தோட்டங்களில் வாழை மரங்கள் கும்பல் கும்பலாய் வளர்ந்து நிற்கின்றன. பலாமரங்கள், அன்னாசிச் செடிகள், மாமரங்கள் என்று தோட்டத்துக்குத் தோட்டம் பழ வகைகள். ஊரைவிட்டுக் கொஞ்சம் வெளியே போனால் வரிசை வரிசையாய் ரப்பர், செம்பனைக் காடுகள்.

நகரின் முக்கிய தெருக்களிலும், நெடுஞ்சாலைகளிலும் கூடாரம் போட்டுப் பழங்களை விற்கும் கடைகள் ஏராளமாக இருக்கின்றன.



✖ மலேஷியப் பெண்மணி

நமக்குப் பழக்கமான பழங்களுடன் மங்குஸ்தான், ரம்புதான், டோரியான் பழங்களும் குவிந்து கிடக்கின்றன.

பழத்துக்கு 'முடி' முளைத்த மாதிரி இருப்பதால் முடிப்பழம் — ரம்புதான் — என்று அதற்குப் பெயராம். தோலியை நீக்கினால் உள்ளே 'லிச்சி' பழம் போல் சுவையான சதைப்பகுதி உள்ளது.

டோரியான் பழத்தைப் பற்றி இரண்டு கருத்துக்கள், 'டோரியான் என்றால் எனக்கு உயிர்' — இது ஒரு சாரார். 'டோரியானா! ஐயோ — நிக்காதீர்கள், ஓடுங்கள்' இது மற்ற கட்சி. பார்ப்பதற்குக் குட்டிப் பலாப்பழம் போல இருக்கும். இதனுள் ஏழு அல்லது எட்டு சுளைகள் தான் இருக்கின்றன. மலாய்க்காரர்களுக்கு இந்தப் பழம் இருந்தால் போதும், வேறு உணவே வேண்டாம்.

''டோரியான் பழத்தைக் கண்டு ஏன் சிலர் பயப்பட வேண்டும்? அதில் அப்படி என்ன இருக்கிறது?'' போய் இறங்கின மறுநாளே நான் அப்துல் காதரைக் கேட்டேன்.

''சாப்பிடுகிறீர்களா ,வாங்கி வருகிறேன்?''

''சாப்பிட்டுக் காண்பித்தால் என்ன தருகிறீர்கள்?'' நான் சவால் விட்டேன்.

''முதலில் சாப்பிடுங்கள். பிறகு சொல்கிறேன்'' என்றவர் வெளியே போய்ச் சற்றைக் கெல்லாம் திரும்பி வந்தார்.

அறைக்குள் நுழைந்ததும் 'குப்'பென்ற நாற்றம். கையிலிருந்த காகிதப் பொட்டலத்தைப் பிரித்தார். உள்ளே டோரியான். பம்பளிமாஸ் பழம் சைஸில் இருந்துகொண்டு தன் மணத்தால் ஊரைத் தூக்கியது.

'ஹோட்டலில் ஏதாவது சொல்லப் போகிறார்கள் — ஏ. ஸி. இருப்பதனால் மற்ற அறைகளுக்குள் இந்த நெடி போய்விடப் போகிறது'' — குமணன் எச்சரித்தார்.

பழத்தைக் கையால் உடைத்துச் சுளைகளை வெளியில் எடுத்தார் அப்துல்காதர்.

பலாச்சுளை மாதிரியே இருந்தாலும், கொழகொழப்பும், நாற்றமும் தாங்க முடியாததாக இருந்தது.

ஒரு சுளையை எடுத்து என் கையில் தந்து ''சாப்பிடுங்கள்'' என்றார் காதர்.

சவாலே — சமாளி! மூக்கைப் பொத்திக் கொண்டு சுளையைக் கடித்தேன். விழுங்குவது பிரும்மப் பிரயத்தனமாக இருந்தது. விழுங்கவும் முடியாமல், கடிக்கவும் முடியாமல், துப்பவும் முடியாமல் தவிப்பது என்றால் என்ன என்று அப்போது புரிந்து கொண்டேன்.

ஒரு சுளையை எப்படியோ விழுங்கி விட்டு, ''சாப்பிட்டு விட்டேன். சாப்பிட்டால் ஏதோ தருவதாகப் பந்தயம் கட்டினீர்களே!'' என்று நினைவுபடுத்தினேன்.

''ஆமாம் சொன்னேன் இல்லையா? சரி தான் — நீங்கள் பந்தயத்தில் ஜெயித்து விட்டீர்கள். அதனால்...''



# சிலசங்கரி



✖ நீர் வளம்

நான் ஆவலுடன் காத்திருந்தேன்.

''இந்த முழு டோரியான் பழமும் உங்களுக்குத்தான்'' என்று காதர் சொன்னதும் எல்லோரும் சிரித்து விட்டார்கள்.

''உங்கள் பந்தயப் பரிசை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள். முதலில் இந்தப் பழத்தை இங்கிருந்து தூக்கிச் செல்லுங்கள்'' என்று நான் கேட்டுக் கொண்டதும் ஆளுக்கொரு சுளையாக அவர்கள் தின்று தீர்த்தனர்.

டோரியான் பழத்தின் விசேஷமே இது தானாம். முதலில் கட்டோடு பிடிக்காதாம். பிற்பாடு பழகப் பழக நாலு பழங்கள் தின்னும் அளவுக்குப் பிடித்து விடுமாம்.

டோரியான் விற்கும் கடைகளில் நின்று வேடிக்கை பார்த்த போது மலாய்க்காரர்களுக்கு அதனிடம் உள்ள பிரேமை வெளியானது. ஒவ்வொரு பழத்தையும் முகர்ந்து பார்க்கிறார்கள், ஒரு செல்லப் பிள்ளை போல் நெஞ்சோடு அணைத்துக் கொள்கிறார்கள். இந்தப் பழத்தை வாங்கத் தனித் தேர்ச்சி வேண்டுமாம் — கதை கதையாய்ச் சொல்கிறார்கள்.

டோரியானின் பெருமைகளை ராமாயணமாய்ச் சொல்லுகிறார்கள். அதைத்தொடர்ந்து உண்டால் குழந்தைப் பேறு இல்லாதவர்களுக்குக் குழந்தை பிறக்குமாம், தாம்பத்திய உறவு வலுக்குமாம். இன்னும் என்னென்னவோ அதன் கல்யாண குணங்களைச் சொன்னார்கள். இவை நிஜமோ, பொய்யோ எனக்குத் தெரியாது. ஆனால் நான் சாப்பிட்ட ஒரு டோரியான் சுளையே எனக்கு ஆயுசுக்குப் போதும்!

அன்றைய மதிய உணவுக்குக் காசி விசுவநாதர் பிராமணாள் ஹோட்டலுக்குப் போனோம். வடை, தோசை, சப்பாத்தி என்று வெகு அமர்க்களம். வடை ஒன்று சாத்துக்குடி சைஸில் இருக்கிறது. இரண்டு தின்று தண்ணீர் குடித்தால் 'டம்' மென்று ஆகிவிடுகிறது.

கே. எல்லில் பல சாப்பாட்டுக் கடைகளுக்கு நாங்கள் சாப்பிடப் போன போதெல்லாம் அங்கு ஈக்களே இல்லாமல் இருந்தது எனக்கு ரொம்ப விநோதமாகத் தெரிந்தது. உணவுப் பதார்த்தங்களைத் திறந்து வைத்தும் கூட ஈ, கொசுக்கள் இல்லாதது அதிசயம்தானே! சுகாதார இன்ஸ்பெக்டர்கள் அடிக்கடி அங்கெல்லாம் வந்து பருந்து தெளித்து, கண்காணிப்பார்களாம். கொஞ்சம் சுத்தம் குறைவாக இருந்தாலும் அபராதம் ஏகமாய் விதித்து விடுவார்களாம்.

மலேஷியா, சிங்கப்பூரில் பொடிப்பாலை அதிகமாகக் கையாளுகிறார்கள். காப்பி என்றால் நெஸ் கபே தூளையும், பால் பவுடர் தூளையும் கலந்து கொடுக்கிறார்கள். 'மாட்டுப்பால்' - காப்பி என்று ஸ்பெஷலாய்ச் சொன்னால் தான் பிரிட்ஜில் தனியாய்ப் பையில் வைத்திருக்கும் பாலில் கலந்து தருகிறார்கள். மாட்டுப்பால் எல்லாக் கடைகளிலும் கிடைப்பது இல்லை; குறிப்பிட்ட சில இடங்களில் மட்டுமே உள்ளது.

சர்க்கரையை அங்கு 'சீனி' என்று சொல்கிறார்கள். 'சர்க்கரை கம்மியாய்ப் போடுங்கள்' என்று முதல் சில நாட்கள் நான் சொன்ன போது நாட்டுச் சர்க்கரை (வெல்லச் சர்க்கரை) சேர்த்துக் கொடுத்து விட்டார்கள்.

மலேஷியத் தமிழர்கள் நடுவில் மலாய் மொழி நிறைய கலந்திருக்கிறது.

காப்பிக்கு கோபி, லாரிக்கு லோரி, சாக்கடைக்கு அல்லூர், காருக்கு காடி, இப்படி பல. இரண்டு நாட்களாகின்றன அவர்களின் பேச்சு நமக்குத் தெளிவாகப் புரிய! யாரைப் பாருங்கள் 'ஆமாம்லா...', 'வேண்டாம்லா' என்று வார்த்தைகளின் முடிவில் 'லா' போட்டுப் பேசுகிறார்கள்.

ஸ்கூட்டரில் இந்தியப் பெண்மணிகள் பயணம் செய்வதைப் பார்க்க வேடிக்கையாக இருக்கிறது. ஒருக்களித்து உட்காரக் கூடாது

என்று அரசாங்கம் கண்டிப்பாய் உத்தரவு போட்டிருப்பதால் புடவை கட்டின பெண்கள் இந்தப் பக்கம் ஒரு கால், அந்தப் பக்கம் ஒரு கால் என்று போட்டுக் கொண்டு புடவையை முழங்கால் வரை வழித்துக் கொள்ள, தலையில் அணிந்திருக்கும் ஹெல்மெட்டின் கீழ் ஒற்றைப் பின்னல் தொங்க 'ஜம்'மென்று சவாரி செய்கிறார்கள்.

பெடலிங் என்ற இடத்தில் உள்ள மாரியம்மன் கோவிலுக்குப் போயிருந்தோம். கோவில் ரொம்ப அழகாக, சுத்தமாகச் சலவைக்கல், பீங்கான் டைய்ஸ் பொருத்தப்பட்டு மின்னுகிறது. இங்குள்ள அரச மரத்தில் ஆறுமாத காலத்தில் ஒரு வினாயகர் முகம் தோன்றியிருப்பது பரபரப்பாக எங்கும் பேசப்படுகிறது. மரத்தின் உடம்பில் பிள்ளையார் முகம், தும்பிக்கை தெளிவாய்த் தெரிகிறது. அதற்கு வெள்ளியில் விபூதிப் பட்டை சாற்றி இருக்கிறார்கள். அரசமரத்து வினாயகரைக் காண வெளியூரிலிருந்தெல்லாம் பக்தர் கூட்டம் வருகிறது.

ஆலயத்தின் குருக்கள் வீட்டைப் பார்த்தேன். கோவிலின் காம்பௌண்டிலேயே இருக்கும் இல்லத்தில் குருக்கள் குடும்பத்துடன் வசிக்கிறார்.

சோபா செட், ஃபான், டி. வி. டெலிபோன் என்று சகலவிதமான வசதிகளுடனும் குருக்கள் இருக்கிறார். நம் நாட்டில் தட்டில் விழும் பத்துக் காசுக்கு அல்லல்படும் குருக்களின் நினைப்பு என் நெஞ்சில் தாண்டவமாடியதை என்னால் தவிர்க்க முடியவில்லை.

''வீட்டுச் சாப்பாடு வேணுமானால் அன்றாடம் என் வீட்டில் சாப்பிடலாம். நீங்கள் தள்ளி ஹோட்டலில் இருப்பதனால் வரப் போகக் கஷ்டப்பட வேண்டாம். போன் பண்ணுங்கள், காரில் நான் வந்து அழைத்து. சாப்பாடு போட்டு மீண்டும் கொண்டு விடுகிறேன்'' என்று அந்தக் குருக்கள் சொன்னபோது அவரின் நல்ல மனசையும், அந்தஸ்தான வாழ்க்கையையும் நினைத்து நான் சந்தோஷப்பட்டேன்.

மலாய் மொழியில் சமஸ்கிருத வார்த்தைகள் நிறையக் கலந்திருக்கின்றன. மலாய் நாட்டவர் தங்களை 'பூமி புத்ரர்' — மண்ணின் மைந்தர்கள்' — என்று அழைத்துக் கொள்கின்றனர். பூமி புத்ரர்களுக்கு அந்நாட்டில் ஏக சலுகைகள்.

மலேஷியாவின் மொத்த ஜனத்தொகையில் 47 சதவிகிதம் மலாய்க்காரர்களும், 30 சதவிகிதம் சீனர்களும், 13 சதவிகிதம் இந்தியர்களும், மற்றவர் ஆசிய ஆங்கிலேயர்களாகவும் இருக்கின்றனர்.

படிக்காமல், தாழ்ந்த நிலையில் உள்ள மலாய்க்காரர்களின் தரத்தை உயர்த்த இன்றைய அரசாங்கம் ரொம்பப் பாடுபடுகிறது.

யார் எந்தவிதத் தொழில் செய்தாலும் அதில் 3 சதவிகிதமாவது மலாய்த் தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்புக் கொடுக்க வேண்டும் என்ற சட்டமே இருக்கிறது.

பூமி புத்ரர்களுக்கு உதவி செய்ய என ஒரு தனி வங்கிகூட உள்ளது. பூமி புத்ரன் ஒருவன் தொழில் ஆரம்பிக்க எண்ணினால், சுலபமாக அவனுக்கு இந்த வங்கி பல வகைகளிலும் உதவுகிறது.

''நாளையிலிருந்து உங்களுக்கு வெளியூர்ப் பயணம் துவங்குவதால், இன்றைக்கே பார்க்க வேண்டியவைகளைப் பார்த்து விடுங்கள். அப்புறம் ஒழியாது'' என்று குமணன் சொன்னதும், காசி பிராமணாள் ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு நேராக ஓர் ஆங்கிலப் படத்துக்குப் போனோம்.

படக்கொட்டகையை நம் நாட்டுநவீன அரங்குகளோடு ஒப்பிடும்போது பிரமாதம் எனச் சொல்ல முடியாது. பரவாயில்லை.

'ஜாஸ்' படம் பார்த்திருந்த நாங்கள் அப்போது அங்கு ஓடிக் கொண்டிருந்த 'ஜாஸ்—2' காண விருப்பம் கொண்டு அதற்கே போனோம்.

முதல் படத்தில் விறுவிறுப்பு, திகில், கதை அம்சம், போட்டாக்ரஃபி எல்லாம் ரொம்ப ஜோர். இதில்? ம்ஹூம் — ஒரு மண்ணும் இல்லை.

மலேஷியா சிங்கப்பூரில் கழித்த மூன்று வாரங்களில் நாங்கள் பார்த்த ஒரே படமான ஜாஸ்—2, அதிசாதாரணமாக அமைந்து விட்டதில் எனக்கு வருத்தமே!

(தொடரும்)

## கிண்டல் கிட்டா!











# வீணை கானமும் மெல்லிசை கீதமும்

Face to Face





உரையாடலில் பங்கு பெறுவோர்:

1. குமாரி காயத்ரி, வீணை வித்வான்
2. திரு. ஏ. வி. ரமணன், மெல்லிசைப் பாடகர்

ரமணன்: காயத்ரி...! ரொம்பப் பெரிய மனுஷி ஆயிட்டே போலிருக்கு. இந்த டிஸ்கஷனுக்கு உன் வீட்டுக்கு வரவழைச்சுட்டியே...

காயத்ரி: நோ... நோ... டோண்ட் டேக் இட் அதர்வைஸ்... அடுத்த வாரம் எனக்குக் கல்யாணம்னு உங்களுக்குத் தெரிஞ்சிருக்கும்னு நெனைக்கிறேன்... வீட்லே 'மொளைக்' வேலை நடந்துண்டு இருக்கு... அதனால்தான்...

ரமணன்: ... சும்மா... விளையாட்டாச் சொன்னேன்... மேரேஜுக்கு அப்புறம் வீணை வாசிக்கிறதைப் பத்தி என்ன திட்டம் வெச்சிருக்கே?...

காயத்ரி: கச்சேரிக்காக வீணை வாசிக்கிற விஷயத்துலே நான் ஓரளவுக்கு 'Fed up' கூட ஆயிட்டேன்... கல்யாணத்துக்கு அப்புறம் ஐ வில் பீ ஒன்லி அபௌட் மை கான் சர்ட்ஸ்... லைட் மியூசிக் பாடறதை நீங்க எப்படி ரெலிஷ் பண்ணறீங்க...?

ரமணன்: ஒரு ஸ்டேஜுக்குப் பிறகு உன்னை மாதிரி எனக்கும் 'Fed up' ஆகத்தான் இருக்கு... ஆனா புதுப்புதுப் பாடல்கள் வெளியாகிக் கொண்டே இருக்கறதுனாலே இட் ஹெல்ப்ஸ் மீ டு ரிஃப்ரெஷ் மை செல்ஃப்... கர்நாடிக் மியூசிக்லே லிமிடேஷன்ஸ் உண்டு.... திரும்பத் திரும்பப் பாடின பாடல்களையே தானே பாடவோ, வாசிக்கவோ முடியும்...

காயத்ரி: ஒரு விதத்திலே சரிதான்... ஆனாலும் கர்நாடக சங்கீதத்துக்குன்னு சில சிறப்புகள் உண்டு... ஒரு புதிய சினிமாப் பாடலையோ, அல்லது வேறு பாடலையோ இசையமைத்து உங்கள் குழுவில் பாட எவ்வளவு நேரம் தேவைப்படும்?

ரமணன்: மொத்தமா ஒரு மணி நேரத்துலே அந்தப் பாட்டை நாங்கள் பாடிவிட முடியும்... இப்போ லைட் மியூசிக்குக்கு மக்களிடையே அமோகமான வரவேற்பு இருக்கு... குறிப்பா என் கச்சேரிகளுக்கு வருபவர்களில் இளைஞர்கள் தான் அதிகம்.

காயத்ரி: அம்மாதிரி பார்த்தால் என்னுடைய வீணைக்கச்சேரிகளுக்கு வயதானவர்கள் அதிகம் வருகிறார்கள் என்று சொல்லலாம்... பட் யங் பீபிள் ஆல்ஸோ கம்... உங்க கச்சேரிக்கு வயதானவர்கள் வருகிறார்களோ?

ரமணன்: வொய் நாட்... தாராளமாக வருகிறார்கள். அவர்கள் திருப்திக்காகவே நான் சில பாடல்களைப் பாடுகிறேன்... பிடில், வீணை போன்ற சில வாத்தியங்கள் 'இன்வால்வ்' ஆகும் சில பாடல்களை எங்கள் ம்யூசிக் ட்ரூப் பாடுவது இல்லை...

காயத்ரி: ஏன் அப்படி...?

ரமணன்: இவ்வாத்தியங்களைச் சிறப்பாக வாசிக்கக் கூடியவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. வேறு நல்ல கச்சேரிகள் கிடைத்தால் அவர்கள் திடீரென்று வரா

மல் போய் விடுவார்கள். இதனால் தான் நான் 'அடெம்ப்ட்' பண்ணுவதில்லே. இப்போ நீ அதிகம் கச்சேரிகள் வாசிப் பதில்லே என்று நினைக்கிறேன்.

காயத்ரி: ஓ.. வாசிக்கிறேனே....

ரமணன்: நான் கல்யாணக் கச்சேரிகளைப் பற்றிச் சொல்லவில்லே... சபா கச்சேரி களைப் பற்றி சொல்கிறேன்...

காயத்ரி: சபாக்காரர்கள் பெரும்பாலும் 'ஆர்ட்டிஸ்ட்ஸ்' தங்களைத் தேடி வந்து வாய்ப்புக்காகக் கெஞ்சணும்னு நெனைக்க றுங்க.... ஐ ஆம் நாட் தட் டைப் ...

---

## 'பாக்ஸ் ஆபீஸ் ஹிட்' என்றால் என்ன பொருள்?

நான் திரைப்படம் ஒன்று எடுத்தேன். அது நன்றாக ஓடும் என்று நினைத்தேன். சில விநியோகஸ்தர்கள் அதை வாங்கும் போது "உங்கள் படம் நிச்சயம் பாக்ஸ் ஆபீஸ் ஹிட்" என்று கூறி எடுத்துப் போனார்கள். ஆனால் அது தியேட்டரில் ஒரு மாதம்கூட ஓடாமல் நின்றுவிட்டது.

பிலிம் சுருள் கொண்ட பாக்ஸ் (Box) ஆபீஸுக்கு அதாவது புரொடக்ஷன் ஆபீஸுக்குத் திரும்பி வந்து பண விஷயத்தில் என்னை மிகவும் ஹிட் (hit) செய்து விட்டது.

இதைத்தான் விநியோகஸ்தர்கள் ஜாடையாக அப்படிக் கூறினார்கள் என்பதைப் புரிந்து கொண்டேன்.

—கண்ணதாசன் சொற்பொழிவில் கூறியது.

கேட்டவர்: "சங்கரி புத்திரன்."



---

சங்கீத விழாக்களில் வாசிப்பதற்குக் கூட எனக்கு வாய்ப்பு அளிப்பதில்லே ... பால முரளி கிருஷ்ணாவுக்கு என்னுடைய வீணை வாசிப்புப் பிடிக்கும் .... அவர் மூலமா மியூஸிக் அகாடமி நடத்திய இசைவிழா விலே கச்சேரி செய்ய வாய்ப்பு கிடைத்தது. சபாக்காரர்கள் உங்களிடம் எப்படி நடந்து கொள்கிறார்கள்?

ரமணன்: நான் 1967-லிருந்து லைட் மியூஸிக் பாடி வருகிறேன். ... பெரிய சபாக் காரர்கள் சரியான ஆதரவு தர விருப்பப் படவில்லே என்றுதான் சொல்வேன் ... ஒரு கல்யாணத்திலே உன் கச்சேரியைக் கேட்கும்படி வாய்ப்பு ஏற்பட்டது. மிக மிகக் குறைவான நபர்களே கச்சேரியைக் கேட்டுக் கொண்டிருந்தனர் . அவர்களி லும் பெரும்பாலோருக்குக் கச்சேரியிலேயே நாட்டமில்லே ....

காயத்ரி: கல்யாணக் கச்சேரிகளை நான் பணத்துக்காகத்தான் ஒப்புக் கொள் கிறேன்....

ரமணன்: நீங்கள் வெளிப்படையாகப் பேசுவதைப் பாராட்டறேன். ஆனா ஒரு விஷயம் நான் ஆத்மபூர்வமா சொல்லி யாகணும்... மற்ற எல்லா வீணை வித் வான்களையும் விட மிகவும் துரிதமாக வீணை வாசிப்பது நீ மட்டும்தான். அதற்குக் காரணம் ஏதாவது சொல்ல முடியுமா?

காயத்ரி: சின்ன வயசுலேந்தே வேகமா வாசிக் கறதை நான் விரும்பி வருகிறேன்...

ரமணன்: வேறே ஏதாவது காரணம் உண்டா?

காயத்ரி: ஐ ஆம் யங்...தட் மே பீ த ரீசன்.... ரமணன்... உங்க மனைவியும் உங்க ட்ரூப்பிலே உங்களோடேயே பாடறுங்க... அதனாலே உங்களுக்கு 'அட்வான்டேஜ்' ஜாஸ்தியா? இல்லேன்னு இடைஞ்சல்கள் ஜாஸ்தியா?

ரமணன்: என் மனைவி உமா ஒரு நல்ல பாடகி. தானே சொன்னால் தற்பெருமை அடித்துக் கொள்வது போல் இருக்கும்... சினிமாவிலே பின்னணி பாடறதுக்கு அவ ளுக்குத் தகுந்த வாய்ப்புக் கிடைத்தால் ஷி வில் கம் அப் லைக் எனிதிங்... அவ ளுடைய 'டேலண்ட்'டை வீணாக்கக் கூடாது என்கிற காரணத்தினாலேதான் ட்ரூப்லே எங்கள் கல்யாணத்துக்கு அப்புறமும் பாடும்படி சொல்லிண்டிருக்கேன்.... கண வன், மனைவிஇருவரும் சேர்ந்துபாடுவதால் ஒரு 'டிக்னிடி'யும் கிடைக்கிறது. ஆனா இடைஞ்சல்களும் நிறைய உண்டு. எங்க ளுக்கு ஒன்றரை வயதில் குழந்தை இருக் கிறது. குழந்தையைக் கவனித்துக் கொள் வது வேறு ஒரு பிரச்னை...

காயத்ரி: என்னைப் பொறுத்த மட்டில் கணவனும் மனைவியும் மாறுபட்ட துறை யைச் சேர்ந்தவர்களாக இருந்தால் நல்லது என்பது எனது அபிப்பிராயம். ஒரே துறை யாக இருந்தால் அதைப் பற்றித்தான் வீட்டிலும் பேச்சு அதிகமாக இருக்கும்.

ரமணன்: எங்கள் விஷயத்தில் அது மாதிரி கிடையாது. வீட்டில் கச்சேரி சம்பந்த மாகப் பேசவே மாட்டோம். ஏன் கச்சேரி சமயத்தில்கூட அது சம்பந்தமாக எங்க ளிடையே பேச்சு இருக்காது.

காயத்ரி: தென் இட் ஈஸ் ஆல் ரைட்...!

ரமணன்: காயத்ரி! வீணை வாசிப்பில் ஏதா வது குறிக்கோள் வெச்சிருக்கயா?

காயத்ரி: 'வெஸ்டர்ன் கிளாஸிகல்' மியூ சிக்கை வீணைலே மாஸ்டர் பண்ணணும்னு ரொம்பவும் ஆசை. டயிற்சி செய்து வருகிறேன்... ஐந்து விரல்களையும் உப யோகப்படுத்தி வெஸ்டர்ன் கிளாஸிக்கல் மியூசிக்கை வீணைலே வாசிக்கணும்... . மெலடியை இரண்டு விரல்களிலும் கண்ட் ரோலை இரண்டு விரல்களிலுமாக வாசிக் கிறேன்... ஒரு விரல் வாசிப்பதற்கு எட்ட வில்லே.. பிரபல புல்லாங்குழல் வித்வான் பன்னாலால் கோஷ் ஆடரேஷன் மூலம் எட்டாத விரலின் நீளத்தை அதிகப்படுத்

திக் கொண்டது மாதிரி நானும் ஆபரேஷன் செய்து கொண்டு அந்த விரலின் நீளத்தை அதிகப்படுத்தலாம் என்று ஓர் எண்ணம் இருக்கிறது. ஆபரேஷன் செய்து கொள்ளத் தயக்கமாக இருக்கிறது. அது சரி. நீங்க ஏன் சினிமாவிலே பின்னணி பாட முயற்சி செய்யலே? யூ ஹேவ் எவெரி குட் வாய்ஸ்.

ரமணன்: வேறு மாநிலங்களிலிருந்து வந்து இங்கே செடில் ஆன பாடகர்களுக்கு அளிக்கும் வாய்ப்பை நம்முடைய சினிமா உலகம் தமிழ்நாட்டிலேயே பிறந்து வளர்ந்து மக்களிடையே அங்கீகாரம் பெற்று வரும் இளம் பாடகர்களுக்குச் சரியாக அளிப்பதில்லை என்கிற ஆதங்கம் எனக்கு எப்போதுமே உண்டு. இப்போது 'இதயம் ஒரு கவிதை' என்கிற படத்துக்காக நான்கு பாடல்கள் பாடியிருக்கிறேன். அதோடு இன்னொரு நியூஸ். 'கவிதாவுக்காகப் பிரார்த்தனை செய்யுங்கள்' என்ற படத்தில் பிரதான பாத்திரத்தில் நடிக்கிறேன்.

காயத்ரி: வெரி குட்... சினிமாவிலே பின்னணி பாடறதுக்கும் மேடைலே கச்சேரி செய்யறதுக்கும் என்ன வித்தியாசம் காண்கிறீர்கள்?

ரமணன்: பின்னணி பாடும்போது ஏதாவது தவறு நேர்ந்து விட்டால் திருத்திக் கொள்ளலாம். ஆனால் மேடையில் பாடும்போது அம்மாதிரி முடியாது. மேடைக் கச்சேரிலே ஐ டிரைவ் மோர் ப்ளஷர்... நன்றாகப் பாடினால் அதற்கான பாராட்டை உடனே நேரிலேயே பெறலாமே... ஐ திங்க் நீ கூட லைட் மியூசிக் குழுவிலே பாடியிருக்கே இல்லையா?

காயத்ரி: யெஸ்... ஓரிரண்டு சமயத்துலே பாடியிருக்கேன்.

ரமணன்: எந்த மாதிரியான இடத்துலே வீணை வாசிக்கிறதை நீ விரும்பறே!

காயத்ரி: சபா மாதிரி இடங்களிலே வாசிக்கிறதுலே எனக்கு அதிகமான திருப்தி இடையாது. அளவான ஆடியன்ஸோட ஹோம்லி அட்மாஸ்பியர்லே வீணை வாசிக்கிறதை விரும்பறேன்...

ரமணன்: சின்ன வயசுலே கச்சேரிலே வீணை வாசிச்சதுக்கும், தற்போது கச்சேரிலே வாசிக்கறதுக்கும் ஏதாவது வித்தியாசத்தை உணர முடிகிறதா?

காயத்ரி: சின்ன வயசுலே ஆடியன்ஸைப் பத்தின கவலையோ பாதிப்போ இல்லே. மன சுதந்திரத்தோட வாசிக்க முடிஞ்சுது. தற்போது அது மாதிரி என்னால் வீணை வாசிக்க முடிகிறதில்லை என்று சொல்லலாம்! அதுசரி, லைட் மியூசிக் பாடறதுக்குக்கூட கர்னாடக சங்கீதத்தில் தேர்ச்சி வேணும் என்கிறதை ஒப்புக் கொள்கிறீர்களா?

ரமணன்: நல்ல குரலும் ஓரளவு சங்கீத ஞானமும் இருந்தால் போதும்... கர்நாடக சங்கீதத்தில் தேர்ச்சி அவசியம் இல்லே... நான் கர்னாடக சங்கீதத்தை முறையாகப் பயின்றவன்... பாலமுரளி கிருஷ்ணாவின் சிஷ்யன்...

காயத்ரி: சினிமாவிலே உங்களது சொந்தப் பாணியிலே பின்னணி பாடும்போது, மற்ற பின்னணிப் பாடகர்களின் பாடல்களை அதிகம் நீங்கள் பாடியிருப்பதால், பாதிப்பு ஏதேனும் உண்டாகுமா?

ரமணன்: அம்மாதிரி ஒன்றும் கிடையாது... என்னுடைய சொந்தக் குரலில், வேறு பாதிப்பு இல்லாமல், பாட முடிகிறது...

காயத்ரி: ரசிகர்கள் அப்படி எடுத்துக் கொள்கிறார்களா?

ரமணன்: சில ஹிந்தி சினிமாப் பாடல்களின் மெட்டுகளை மட்டும் எடுத்துக் கொண்டு, அம்மெட்டுகளுக்குத் தமிழ்ப் பாடல்கள் பாடி ரெகார்ட் வெளி வந்திருக்கிறது. அவற்றில் வேறு பாடகர்களின் குரல் பாதிப்பு இல்லாமல் எனது சொந்தக் குரலில்தான் பாடியுள்ளேன்... அதைக் கேட்ட என் நண்பர்களும் பாதிப்பு இல்லை என்றுதான் சொன்னார்கள்...

காயத்ரி: மிஸ்டர் ரமணன்... அடுத்த வாரம் எனக்குக் கல்யாணம்... சென்னையிலே தான் நடக்கிறது ஹி ஈஸ் எ மெரைன் இன்ஜினீயர்... இன்விடேஷன் அனுப்பறேன்... அவசியமா கல்யாணத்துக்கு நீங்க வரணும்...

ரமணன்: ஓ... ஷ்யூர்... விஷ் யூ பெஸ்ட் ஆஃப் லக்...

உரையாடல் ஏற்பாடு: நாயகன்
புகைப்படம்: மன்னை மூர்த்தி

## கோடைச் சிறப்பிதழ்

**வாசகர்கள் பரிசு**

ஏப்ரல் 1ல் கல்கி கோடை சிறப்பிதழாக மலர்கிறது என்ற அறிவிப்பைப் பார்த்திருப்பீர்கள். 'ஏப்ரல் முதல் தேதி யாயிற்றே?' என்று யோசிக்காதீர்கள்! இம்மலரை வாங்காதவர்கள்தான் ஏப்ரல் முட்டாளாகி விடப் போகிறார்கள்!

கோடையின் கடுமையெல்லாம் மறைந்து போகுமாறு பக்கத்துக்குப் பக்கம் சிறந்த நகைச்சுவை அம்சங்கள் இடம் பெறும்.

அதிக பக்கங்கள்: முழு நீள நாவல்: புதிய தொடர் கதை ஆகியனவும் உண்டு.

வாசகர்கள் நகைச்சுவைச் சம்பவங்களையும் கற்பனையில் தோன்றிய சிரிப்புத் துணுக்குகளையும் **கோடைச் சிறப்பிதழுக்கு** என்று உறையின் மேல் குறிப்பிட்டு அனுப்பலாம். அந்தச் சிறப்பிதழில் பிரசுரமாகும் துணுக்குகளில் முதல், இரண்டாவது, மூன்றாவது பரிசுகளுக்குத் தகுதியானவற்றை திருமதி மனோரமாவும் திரு சுருளிராஜனும் தேர்ந்தெடுப்பார்கள்.

**முதல் பரிசு:** ஊட்டிக்குப் போக வர இரு முதல் வகுப்பு டிக்கெட்டுகள்.

**இரண்டாம் பரிசு:** பெங்களூருக்குப் போக வர இரு இரண்டாம் வகுப்பு டிக்கெட்டுகள். ஸ்லீப்பர் வசதியுடன்.

**மூன்றாம் பரிசு:** கொடைக்கானலுக்கு ஒரு இரண்டாம் வகுப்பு டிக்கெட். ஸ்லீப்பர் வசதியுடன்.

தேவையானால் ரொக்கப் பரிசுகளாக மாற்றிக் கொள்ளலாம்.

முடிவு தேதி: **மார்ச் 10உ**

பிரசுரத்துக்கு ஏற்கப்படாதவற்றைத் திருப்பி அனுப்புவதற்கில்லை. கடிதப் போக்குவரத்து கிடையாது.

# நரிக்கொம்பு 10

மினி மர்மத் தொடர் கதை

கிருஷ்ணவேணி

புராதனக் கோயில் சிற்பங்களில் ஒற்றைக் கொம்புடைய நரியின் உருவம் செதுக்கப் பட்டுள்ளதைத் தன் ஆராய்ச்சிக்கு ஆதாரமாக ரமேஷ் விளக்கி இருப்பதை நந்தினி குறிப்பிட்டதும், ''நிஜமாகவா? நரிக்குக் கொம்பு முளைப்பதாவது. விந்தையாக இருக்கிறதே.!'' என்றான் ஹரி.

''இதையும் விட வியப்பான விஷயங்கள் இருக்கின்றன ஹரி. பாரத மக்களின் நாகரீகம் கம்போடியா வரை பரவி இருந்தது என்பதற்கு ஆதாரங்கள் உள்ளன இல்லையா? போரோபுதூர் இடிபாடுகள், இந்திய வம்சாவழி மன்னர்களின் ஆதிக்கம் அதுவரை பரவி இருந்தன என்பதற்குச் சான்றுகளாக உள்ளதல்லவா?''

''ஆமாம்... அதற்கும் ரமேஷின் நரிக் கொம்பு விஷயத்துக்கும்...''

''தொடர்பிருக்கிறது. போரோபுதூரிலிருந்து கிடைத்த ஒரு நாணயம் – அதில், கொம்புடைய நரியின் உருவம் பொறிக்கப்பட்டிருந்தது.''

''ஆகவே நரிக்கொம்பு நம்பிக்கை உறுதிப் படுகிறது அப்படித்தானே?''

''உறுதிப் படுத்துவதற்காகத்தான்-அதைப் பற்றி ஆராய்ச்சி செய்யத்தான் கம்போடியாவிற்குப்போனார். நாகர்களுக்கும் இதற்கும் தொடர்பு உண்டு என்பது தெரியவே அஸ்ஸாமில் வாழும் நாகர்களையும் அவர்களின் அழிந்து பட்ட பண்டைய நாகரீகங்களையும் பற்றி அறிந்து வருவதற்காகவே அங்கும் போனார். நரிக்கொம்பு இலச்சினை அவர் உயிரையே குடித்துவிட்டது...'' நந்தினியின் தொண்டை அடைத்துக் கொண்டது – காதலனின் அவலமுடிவின் நினைவினால்.

''ரமேஷின் ஆராய்ச்சியே அவனது மறைவிற்குக் காரணமாகி இருக்கலாம் என்று கருதுகிறாயா நந்தினி?'' என்று கேட்டான் ஹரி.

''கொம்புள்ள நரி பொறிக்கப்பட்ட நாணயத்துக்கு வியப்பூட்டும் வகையில் அபூர்வமான சக்திகள் உண்டென்றும்; நாணயம் போன்றிருந்தாலும் உண்மையில் அது மக்கள் புழக்கத்துக்குப் பயன்படும் சாதாரண நாணயமில்லை என்றும் மந்திரத் தன்மையும் மாய சக்திகளும் கொண்டதொரு யந்திரம் என்றும் ஒரு கட்டுரையில் குறிப்பிட்டிருந்தார்.''

''இத்தனை விஷயங்களைக் குறிப்பிடுகிறாயே, என் கவனத்துக்கு வரவே இல்லையே இதெல்லாம்.''

''உங்கள் கவனத்துக்கு இதெல்லாம் எப்படி வரும். உலகின் எந்த மூலையிலாவது நவீன பாணியில் ஏதாவது ஒரு கட்டிடம் கட்டி இருப்பதைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தால் அதைப் பற்றித் துருவித் துருவித் தகவல் சேகரிப்பீர்கள். அவரவர்களுக்கு எதில் ஈடுபாடோ அதில்தானே கவனம் போகும். அசட்டு எழுத்தாளரா நீங்கள்? புகழ் குவிக்கும் ஆர்க்கிடெக்ட் ஆயிற்றே!''

''குத்தல் போதும். மந்திரத் தன்மையுள்ள அந்த யந்திரத்துக்கும் இவன் மறைவுக்கும் எப்படி முடி போடப் போகிறாய்? நீயும் ஒரு எழுத்தாளியாயிற்றே!''

''நம்பிக்கை இல்லாத நீங்கள் இதில் ஆர்வங்காட்டுவானேன்?''

''ஆர்வங்காட்டுவதிலிருந்தே அதில் ஒரு நம்பிக்கை ஏற்பட ஆரம்பித்திருக்கிறதென்று தெரியவில்லையா?

''கொம்புடைய நரியின் உருவமும் அதைச் சுற்றி ஏதோ மர்மமான முறையில் சங்கேத பாஷையில் சில கோடுகளும் எழுத்துக்களுமிருந்ததாம் அந்த யந்திரத்தில்?''

''ரமேஷ் விவரித்துள்ள அந்த யந்திரத்தை நீ பார்த்திருக்கிறாயா?''

''நானு... அதை யாருமே பார்த்ததில்லை. ஏன் ரமேஷ் கூடப் பார்த்திருப்பதாகத் தெரியவில்லை. மந்திரத் தன்மை கொண்ட அந்த யந்திரம் ஒன்றே ஒன்றுதானும். அதன் அபாரமான அதிசயத் தன்மைகளைப்பற்றி அனுபவித்தவர் போல எழுதி இருந்தார் ரமேஷ். தம் அனுபவங்களைத்தான் அப்படி அவர் எழுதினாராம். ஆனால் அந்த அபூர்வப் பொருள் அவரிடமே இருக்கலாம் என்ற நம்பிக்கையை உண்டாக்குவதாக இருந்தது அவர் எழுத்தின் வேகம்.''

''யந்திரம் என்று குறிப்பிடும் அது எப்படி இருக்கும் என்று நீ ஊகிக்கிறாய். ஒரு சின்னஞ்சிறிய பொருளாகத்தானிருக்க வேண்டும். இல்லையா?'' என்று கேட்டான் ஹரி. ஏதோ ஒரு சிறிய விலைமதிப்பற்ற பொருளை அநீதாவும் அவள் சித்தப்பாவும் தேடி அலைகிறார்கள் என்ற நினைவு சிந்தனையில் மிதந்தது.




புட்டோவிற்குத் தூக்கு தண்டனை தர பாகிஸ்தான் சுப்ரீம் கோர்ட் அறிவித்த முடிவு அதிர்ச்சி தரக் கூடியது.

புட்டோவின் வக்கீல் தமது வாதங்களை எடுத்துரைக்க எத்தனை நாட்களை எடுத்துக் கொண்டார் என்பதே ஒரு ரிக்கார்ட். சரியாக 56 தினங்கள் வக்கீல் பக்தியார் பேசியிருக்கிறார். - கமல்

''கொஞ்சநேரப் பேச்சிலேயே நீங்கள் அந்த நரிக்கொம்புக்குச் சின்னஞ்சிறிய பொருள் என்று ஓர் உருவம் தந்து விட்டீர்களே. ரமேஷ் அது விஷயமாக ஆராய்ச்சியே செய்திருக்கும்போது அவர் எழுத்து எப்படி இருந்திருக்கும்?'' என்றவள் ஹரியை ஒரு தினுசாகப் பார்த்துக் கொண்டே, ''சின்னஞ்சிறிய பொருள் என்று உத்தேசமாக — தற்செயலாகக் கூறினீர்களா அல்லது....'' என்று இழுத்தாள் நந்தினி. 'பிறகு ''உங்களுக்கு இதைப்பற்றி ஏதோ தெரிந்திருக்க வேண்டுமென்று நினைக்கிறேன்'' என்றாள்.

''உன்னிடமிருந்து தெரிந்து கொண்டதைத் தவிர அதிகமாக வேறு எதுவும் தெரியாது.''

''அது போகட்டும், ரமேஷின் மனைவி என்று உறவு சொல்லிக் கொண்டு உங்களோடு ஒட்டிக் கொண்டிருக்கிறாளே அவள் எப்படி இருக்கிறாள்?''

''நந்தினி... நீ மனத்துக்குள் எதையோ வைத்துக் கொண்டு பேசுகிறாய். ரமேஷுக்காகவே அவள் விஷயத்தில் அக்கறை காட்டுகிறேனே தவிர நீ நினைப்பது போலல்ல. இப்படியெல்லாம் பேசுவதாயிருந்தால் நான் கிளம்புகிறேன்!''

''ப்ளீஸ்... அமருங்கள்! என் மனிதர்கள் என்று சொல்லிக் கொள்ள எனக்கு யாருமே இல்லை ஹரி. உழைக்கும் மகளிர் விடுதியில் தங்கிக் கொண்டு உன்னதமான எதிர்காலத்தைக் கனவு கண்டு கொண்டிருந்தேன் ரமேஷின் மூலமாக. அது கனவாகவே போய்விட்டது. இப்போது உங்கள் நட்பையும் இழப்போமோ என்ற அச்சமே...''

''இந்த அசட்டுத் தனத்தையெல்லாம் நான் உன்னிடம் எதிர்பார்க்கவே இல்லை நந்தினி!'' என்று பரிவோடு அவள் கைகளை வருடியபடி மறுபடியும் அமர்ந்து கொண்டான் ஹரி. ''துணிச்சல் மிக்கதோர் நவயுக நாரீமணியாக, தன்னம்பிக்கையின் உருவமாக உன்னைக் கற்பனை செய்து கொண்டிருக்கிறேன் நான். ரமேஷின் மறைவு நாம் யாரும் எதிர்பார்க்காத ஒன்று. அதனால் இப்படி இடிந்து போய்விடலாமா? அவன் ஆராய்ச்சியும் எழுத்துமே அவன் மரணத்துக்குக் காரணமாக இருந்திருக்கலாம் என்று நீ சந்தேகிக்கிறாயா?''

''அப்படிச் சந்தேகிக்கவில்லை. ஆனால் ரமேஷ் ஓடும் ரயிலிலிருந்து தவறி விழுந்து இறந்தார் என்பதை நம்ப முடியவில்லை.''

ஹரி மனத்துக்குள் சொல்லிக் கொண்டான். 'அதை நானும் நம்பவில்லை நந்தினி. ஆனால் நீ இப்போது கூறினாயே நரிக்கொம்பு விஷயம். அதுவே அவன் மரணத்துக்குக் காரணமாக இருக்கலாமென்று கருதுகிறேன்.'

நந்தினி கிளம்புவதற்குத் தயாராக எழுந்தாள். ''ரமேஷ் சமீபத்தில் உனக்கு ஏதாவது அனுப்பினானா — அதாவது பரிசுப்பொருள் மாதிரி... அல்லது தனக்காகப் பத்திரமாகக் காப்பாற்றும்படி கூறி எதையாவது?'' என்று கேட்டான் ஹரி - தான் கேட்பதற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்காத மாதிரி.

நந்தினி ஒருவிநாடி அவனை உன்னிப்பாகப் பார்த்தாள். பிறகு ''அனுப்பினார்... ஆனால், அது ரொம்பப் பர்ஸனல்...'' என்றாள்

''என்ன... என்ன பொருள் அது?'' எவ்வளவு முயன்றும் தன் குரலின் பரபரப்பைக் கட்டுப்படுத்த முடியவில்லை ஹரியினால்.

''ஹரி!... இப்போது நடந்துள்ள நிகழ்ச்சிகளுக்கும் அதற்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. அது என் சொந்த விஷயம்.''

''அவன் அனுப்பிய பொருள் என்ன சொல்லேன்...'' பிடிவாதமிருந்தது அவன் குரலில்.

''ஒரு வைர நெக்லஸ்... என் திருமணப் பரிசாக முன்னதாகவே எனக்கு அதை அனுப்பி யுள்ளதாகவும் திரும்பி வந்ததும் என்னை மணப்பதாகவும் எழுதி இருந்தார்.''

ஹரி சட்டென்று அவள் கையைப் பற்றினான். அந்தப் பிடியின் இறுக்கம் அவன் உள்ளத்தின் புழுக்கத்தைக் காட்டியது.

''அது எப்போது... எங்கிருந்து அனுப்பப் பட்டது?''

(தொடரும்)






26. 'கல்கி துர்ரா'

ஓ... ரங்கநாயகி...

இப்புகல்தானின் சோர்ந்து பட்ட மனம், ஒரு பித்தனின் வீழ்ந்து பட்ட புலன்களைப் போலப் பெரிதாகக் கூவி அரற்றிக் கொள்கிறது..

அவளது பூவான சிரிப்பு; பூத்துக் குலுங்கும் யௌவனம்; பூரிக்கும் கண்கள்; பூஞ்சையான மனம்...

ஆ! இவள் இப்புவியின் ஆட்சியைப் பூலோக சொர்க்கமாக்க, அந்த வானுலகச் சொர்க்கத்திலிருந்து வழி தப்பி வந்து விட்டவள் தானோ என்று எண்ணி, இறுமாந்து, ஏமமுற்ற நாட்கள் தாம் எத்தனை, எத்தனை...

அந்தத் துள்ளத் தெரியாத மீன் விழியில் கண்ட கள்ளத்தனமற்ற மான் மருளல்...

ஓ... உலகிலேயே இரண்[illegible] காவியங்கள் தாம் உயர்ந்தன என்று அறுதியிட்டுக் கூறுவ தானும் அவை, ரங்கநாயகியின் இரு கரிய பெரிய கரும்பனைய விழிகள்...

மறக்க முடியவில்லை.

உருதுக் கவிதைக்கு ஓடி வந்த உயிரோவியம்!

உணர்வு அழுகிறது...

எனது காதல் வானின் ஜோதிக் கீற்று...

தேயாத தேனிலவு...

எனக்கென்றே ஆண்டவன் அனுப்பி வைத்த பூங்காற்று...

அதற்கு மொழியேது? மதமேது? எதுதான் ஏது?

எனது இதய அரங்கில் பொன் மயிலாய், புது மயிலாய், தோகையற்ற பெண் மயிலாய் ஆடுகிறாள்...

ரங்கநாயகி...



மனைவி: என்னங்க... ரொம்ப நேரமா டெலிபோன் டைரக்டரியைப் புரட்டிக்கிட்டேயிருக்கீங்க...?

கணவன்: எப்போ நான் போன் செய்தாலும் 'ராங் நம்பர்'னு பதில் வருதே. எத்தனைபேர் அந்த நம்பர் வச்சிருக்காங்கன்னு பார்க்கத்தான்.!

''பீட்டியென்.''

---

உனது ஆட்டம் எங்கே?

ஒளி எங்கே?

உணர்வுகள் எங்கே?

அதோ! மைசூர் மலைச் சிகரங்களில் வண்ண வண்ண மேகங்கள் வருவனவும் போவனவுமாயிருக்கின்றன...

ஓ... மேகங்களே!

ரங்கநாயகி எங்கிருக்கிறாள்?

உங்களுக்குத் தெரிந்தால் தூது சென்று எனது கைத்த நிலையை — கண்ணீர்க் கவிதையை அவளுக்கு அறிவித்துப் படித்துச் சொல்லுங்கள்...

அவளது பூ மழையில் நனைந்த பிறகு, புதைகுழியில் இறங்குகிற நாட்களை எண்ணிக் கொண்டிருக்கிறேன்...

எனது கனிந்த சொற்களைச் சாறு பிழிந்து அவளது மலர்க் கவிதைகளை மரணத்தின் கதவுகளில் எழுதிக் கொண்டிருக்கிறேன்...

ஓ... ரங்கநாயகி நீ எங்கிருக்கிறாய்?

இப்புகல்தானின் இந்தப் பேதலித்த நிலை, லால்மகாலின் ஒவ்வொரு திசையிலும் எதிரொலிக்கிறது...

ஒவ்வொரு நாளும் இப்புகல்தான், நனைந்த கண்களும், வறண்ட நாவுமாக இருந்த நிலை கண்டு வருந்தினாள் பெரிய கல்தானு பேகம் பக்ருன்னிஸா. உண்மையில் ரங்கநாயகி இருக்கும் இடம் அவளுக்கும் தெரியாது. தெரிந்தாலும் சொல்லப் போவதில்லை, ஆனாலும் தெரியாது. இந்தப் பிரிவாற்றாமையின் கொடிய நிலைக்கே பெரிய கல்தானு பேகம் பக்ருன்னிஸாதானே மூலகாரணம்? அவள் தூபம் போடவில்லையென்றால் ஹைதர் அலிக்கு உடனடியாக இந்த அவசர முடிவெடுக்கக் காரணமே இல்லை!

அருமை மகனது வீர வாளை எதிர்பார்த்து இந்தத் தேசத்துச் சுதந்திரமே காத்துக் கொண்டிருக்கிறபோது, இப்படி ஒரு ரங்கநாயகியின் குறுக்கீடு, அவர் மட்டுமின்றி அனைவருமே விரும்பாது போகவே, இந்த மூர்க்கமான முடிவுக்கு வர நேர்ந்தது.

பத்தோடு பதினொன்று; அதோடு இது ஒன்று என்றிருந்தால் யார் குறுக்கிடப் போகிறார்கள்? அவளே ஆட்சியின் பொக்கிஷமாகத் திகழப் போகிறவள் என்கிற கசப்பான ரகசியம் பரவப் போய்த்தானே இந்தக் கடினமான முடிவு அரும்பலாயிற்று!

அவள்தான் அப்படி...

பசவராஜ் என்ன பாவம் செய்தான்?

அவனது நட்பால் பல அதிகாரிகளின் முகத்திரை கிழிபட இருந்தது. ஆனபடியால் அதிகாரிகள் அவனை விரும்பவில்லை. தீர்த்துக் கட்ட முடிவு செய்தனர். இரண்டும் ஒன்று சேர்ந்து பேரம்பாக்கத்தில் வசதியாகக் கிடைத்து விடவே, ஹைதர் தமது ராஜ தந்திரப் பிரயோகத்தைப் பயன்படுத்தி விட்டார். இதன் எதிரொலி என்னவாயிருக்கும் என்று யாரும் எதிர்பார்க்காவிட்டாலும், ஹைதர் எதிர்பார்த்தார். இல்லையென்றால் அவர்களை ஹைதர் நகரில் சிறை வைப்பானேன்? காஞ்சிபுரத்து மண்ணிலேயே புதைத்து இருக்கலாமே!

மனநிலையை ஒருவாறு சமனப்படுத்திக் கொள்ள முயல்கிறான் இப்புகல்தான். முடியவில்லையே!

அந்த லால்மகாலை வெறிக்க வெறிக்கப் பார்க்கிறான். அப்போதைய நிலையில் ஆட்சிப் பொறுப்பு கனமாகவும், கவனமாகவும், அழுத்தமாகவும் அவனது பிடரியில் வந்து குந்தவில்லையானாலும், நாளை அது பிடரியைச் சீவி அழகு பார்ப்பதற்குப் பதிலாகச் சிதைத்து விடக்கூடாதே என்பதில் மிகவும் கவனமாக இருந்தான்; இருக்கச் செய்தது ரங்கநாயகி, பசவராஜ் மறைவு!

நேரமாய் விட்டதை நினைத்துப் பார்க்கிறான். ஆ! ஸ்ரீரங்கப் பட்டினத்து ஆளுநர் சையத் முகமதுவை வரச் சொல்லிவிட்டு, மறந்தே போனேனே! காதல் வயப்பட்ட எவனுக்கும் கவன மறதி இயல்பே போலும்!

நேரே பிரதான கூடத்தை நாடி விரைந்தான் இப்புகல்தான்.

அம்மாவும், சையத் முகமதுவும் ஏதோ மெல்லிய குரலில் மிகவும் ரகசியமாக அங்கே பேசிக் கொண்டிருப்பதைக் கவனிக்கிறான். அவனது செவி மடல்கள் நன்றாக விரிந்து கூர் தீட்டிக் கவனிக்கின்றன. பசவராஜ், ரங்கநாயகி பற்றிய பேச்சுக்கள் அடிபடுகின்றனவா என்பதில் அவனது ஆர்வம் தலைதூக்கி நிற்கி





றது. ஆயினும் அவர்கள் என்ன பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை அவனால் புரிந்து கொள்ள முடியாமல் போகவே, மறைவிலிருந்து வெளிப்பட்டு வருகை தந்தான். அவனைக் கண்டதும் ஆளுநர் சையத் முகமது எழுந்து நின்று சலாமிட்டார். இடக்கையின் புறப்பாகத்தால் 'அமருங்கள்' என்ற சமிக்ஞையுடன் அருகே வந்து அமர்ந்தான் திப்புகல்தான்.

''திப்பு! நமது பேரதிகாரியை வரச் சொல்லிவிட்டு இவ்வளவு கால தாமதமாகவா வர வேண்டும்? நான் இந்தப் பக்கம் வர நேர்ந்ததோ, அவரது தனிமைக்குப் பேச்சுக் கொடுக்க நேர்ந்தது!'' என்றாள் பெரிய கல்தானுபேகம் பக்ருன்னிஸா.

திப்பு கல்தானின் அறத்துன்பம் அவனது முகத்தில் பிரதிபலித்தது.

''திப்பு! ஏதேனும் ரகசியமாகப் பேச அழைத்திருந்தால், நான் புறப்படுகிறேன். இது உனது உரிமை. நான் இருப்பது நாகரீகமாகாது!'' என்று நிரம்பவும் ராஜதந்திரமாகப் பேசி எழுந்து கொண்டாள் பெரிய கல்தானு பேகம் பக்ருன்னிஸா. அவளது இம்மாதிரியான சமத்காரங்கள் ஸ்ரீரங்கப்பட்டினத்திலேயே பிரசித்தமானவை. அவளது விரல் அசைவில்தான் அன்றைய ஆட்சியே விடிந்து கொண்டிருந்ததைக் குமாரன் திப்பு கல்தான் அறியாததல்ல. எத்தனை புரட்சிகரமான திட்டங்களைச் செயல்படுத்தியவள் இந்த மகா கல்தானு பேகம்...



ஆளுநர் சையத் முகம்மது கூர்ந்து கவனிக்கிறார்.

மகா கல்தானு பேகம் பக்ருன்னிஸாவின் பகிரங்கமான ஆட்சித்திறனும் பவித்திரமான இல்வாழ்வின் ஒழுக்கமும் இஸ்லாமிய வரலாற்றில் ஒரு கல்கி துர்ரா...

மகுடமணி! இல்லையென்றால் 1* பத்தினி விரதத்தில் பல யோக்யதாம்சங்களைக் கொண்ட ஹைதர் அலி, ஆட்சியின் அதிகாரங்களை மனமுவந்து தமது பட்டத்தரசிக்கு வழங்கி இருப்பாரா?

அன்னை எழுந்து கொண்டதைத் தொடர்ந்து, ''நீங்கள் உடன் இருக்கலாம் அம்மாஜான்! நான் என்ன சதித்திட்டமா தீட்டப்போகிறேன்? எவரையாவது வெட்டிப் புதைக்கவோ, அல்லது மறைத்து வைத்துப் பழி வாங்கவோ ஆணையிடப் போவதில்லையே!''

ஓ... இவன் ஹைதரின் மகன் திப்புசுல்தான்! ஒரு ராஜகர்ஜனையின் அசல் வித்து! பதினாறடி தாண்டி விட்டானே என்று மலைத்துப் போனார் சையத் முகமது!

மகாசுல்தானா பேகம் பக்ருன்னிஸாவும் பொருட்செறிவு நிறைந்த புன்முறுவலுடன், ''நீ என் மகன்! ஹைதரின் ரத்தம்! உனக்கு நல்லதைத் தவிர தீமை செய்யத் தெரியாதே!'' என்றாள்.

அன்னையின் சொடுக்கு...

மெல்லிதாகத் திப்புவின் முதுகில் கசிகிறது...

''அம்மா! நமது ஆட்சியில் சில சீர்திருத்தங்களைக் கொண்டுவர ஆசைப்படுகிறேன். தந்தையார் காலத்திலேயே எனது இந்தச் சீர்திருத்தங்கள் பிரகடனப் படுத்த வேண்டும் என்பது என் அவா. ஒருகால் தந்தையார் மறுப்பாரேயானால், அவர் காலத்துக்குப் பிறகாவது இவை கட்டாயம் பிரகடனப்படுத்தப் பட வேண்டியவை. எனது இந்தச் சீர்திருத்தங்கள் மனிதர்களுடைய அந்தராத்மாவுக்குத் திருப்தி தருவனவாக இருக்க வேண்டும். ஆகவே தான் நமது பேரதிகாரியுடன் கலந்தாலோசிக்க அவரை வரச் செய்தேன்!''

தான் இதற்கு அவசியமில்லை என்று கருதுகிறானோ திப்புசுல்தான் என்றும் ஒருகணம் எண்ணிப் பார்க்கிறாள் பெரிய சுல்தானாபேகம் பக்ருன்னிஸா. ஆயினும் அது குறித்துப் பலத்த விவாதங்களை ஏற்படுத்த விரும்பாது, ''சொல் மகனே! நானும் செவிமடுத்து முடியுமானால் ஆவன செய்கிறேன்!'' என்று கூறுகிறபோது வார்த்தைகளில் பக்குவமாகி அரசியல் பொறுமை குடிகொண்டிருந்தது.

திப்புசுல்தான் சையத் முகமதுவை நோக்கியே விசாரித்தான்: ''நான் ஒரு யந்திரப் புலியைச் செய்யப் போகிறேன்!''

ஒருகணம் நான்கு கண்களும் வியக்க மலருகின்றன. யந்திரப் புலியா?

''யந்திரப்புலி என்றால்? மைசூர் காடுகளில் நிஜப்புலிகளுக்கா பஞ்சம், திப்பு?'' என்று கேட்டாள் பக்ருன்னிஸா.

''அவை, நாம் நினைக்கும் போதெல்லாம் பலர் பார்த்துப் பிரமிக்க — பாடம் கற்க எனது பரம வைரியான கர்னல் பிரெய்த் வெயிட்டைப் பிராண்டிக் கொண்டிருக்க முடியா! அந்தக் காதகன் பிரெய்த் என்னை எப்படியெல்லாம் அலைக்கழித்தான்! அவனைப் பழி வாங்க இந்தத் திட்டம். அவனைப் போலவே ஓர் உருவம் செய்து, அவனைப் படுக்க வைத்து நான் உருவாக்கும் 2* யந்திரப்புலி சாவி கொடுக்கிறபோதெல்லாம் விசை மூலம் பிராண்டி ரத்தம் பீறிட வேண்டும். பிரெய்த் துடிப்பான்! இதைக்கண்டு ஒவ்வோர் அந்நியனும் துடிக்க வேண்டும்!''

''இது முடிகிற காரியந்தானா குமார சுல்தான்! இதனை யார் உருவாக்குவது?''

''நானே கண்டு பிடிக்கப் போகிறேன். அதற்கான கண்டுபிடிப்புத் திட்டங்களை ஆய்ந்து வருகிறேன்!''

''அடுத்து என்ன செய்யப் போகிறாய் மகனே?''

''நமது ராஜ்யத்தில் 3 *பூரண மது விலக்கு கொண்டு வரப்போகிறேன்!''

''பூரண மதுவிலக்கா?''

''ஆமாம்! மதுவால் மனிதர்கள் தங்களின் மிக உயர்ந்த படைப்பை மறந்து மதியிலிகளாய்த் திரிகிறார்கள்!''

''எதிர்ப்பு உருவாகும் திப்பு!''

''எதிர்ப்பு வரத்தான் செய்யும்! ஒரு நன்மையை உத்தேசித்துப் பல தீமைகளை நாம் சுமந்துதான் தீரவேண்டும்!''

திப்புசுல்தான் சொன்ன இந்தச் சொற்களைக் கெட்டியாகப் பற்றி மனத்தில் எழுதி வைத்துக் கொண்டாள் பெரிய சுல்தானா பேகம் பக்ருன்னிஸா.

பசவராஜ், ரங்கநாயகி நினைவு வருகிறது...

ஒருகாலத்தில் இந்த வார்த்தைகள் பயன் படலாமல்லவா?

''என்ன சொன்னாய் திப்பு? ஒரு நன்மையை உத்தேசித்துப் பல தீமைகளை நாம் சுமந்துதான் தீர வேண்டுமா? வருகிற அரசியல் விருந்தாளிகளுக்கும் சில முக்கிய விசேஷங்களுக்கும் மது தேவைப்படுமானால்?''

'ஃபைலிங் க்ளார்க்' வேலைக்கு இன்டர்வியூவுக்குப் போயிருந்தான் ஒரு வாலிபன். ஆபீசர் அவனிடம் பலதரப்பட்ட கேள்விகளைக் கேட்டார். கடைசியில் ஒரு பெரிய ஷெல்பிலிருந்து ஒரு ஃபைலை எடுத்து அவனிடம் கொடுத்து, ''இப்போது இந்தப் பைலில் முதலில் நீ என்ன செய்வாய்?'' என்று கேட்டார். வாலிபன் அந்தப் பைலைப் பிரித்துப் பார்க்காமலேயே சொன்னான்: ''முதலில் இதன் மேலுள்ள தூசியைத் தட்டுவேன்.'' அவனுக்கு வேலை கொடுத்தார்கள்.

—அனிதா ராமச்சந்திரன்.



1* பக்ருன்னிஸா, இரண்டாவது மனைவியானாலும் முதல் மனைவி உடல் நோய்வாய்ப்பட்டிருந்தபோது அவளது கட்டாயத்தின் பேரில் - சந்ததிக்காக வேண்டி இரண்டாம் மனைவியை மனம் ஒருப்படாது மணந்து கொண்டார் ஹைதர் அலி. முதல் மனைவி இறந்த பிறகே பக்ருன்னிஸாவிடம் அவரது மனம் ஒன்றியது.

2* இன்றைக்கும் அந்த யந்திரப்புலி விக்டோரியா ஆண்ட் ஆல்பர்ட் மியூஸியத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

3* History of Tippu - Hasan

''4* அனுமதிப் பத்திரமுறையை அமுல் படுத்தப் போகிறேன். இந்த மதுபானக் கடையை எனது விசுவாசத்துக்குரிய பிரெஞ்சு ராணுவத் தலைவன் லாலி என்பானுக்கு வழங்கப் போகிறேன். யுத்தத்துக்கு அவன் எனக்குச் செய்த உதவிக்கு நான் செய்யப் போகிற கைம்மாறு. எனது உத்தரவுக்கு உட்பட்டவர்களே மதுவருந்தலாம். நானும் தேவை என்று தெரிந்தாலொழிய உத்தரவு வழங்க மாட்டேன்.''

ஆளுநர் சையத் முகமது அயர்ந்து போனார்! இப்புவின் புதிய ஆட்சியில் இந்தத் தென்னகம் ஒரு புதிய சரித்திரத்தையே காணப் போகிறது என்று மகிழ்ந்து கொண்டார்! இப்புகல்தான், நிஜமாகவே ஒரு புரட்சி நிறைந்த 5* மக்கள் தலைவன் — மானுட திலகம்!

''அடுத்து?'' அவரே விரைந்து கேட்டார்.

இப்பு பதில் சொன்னான்: ''நமது ஆட்சியின் கீழிருக்கும் இருபத்தேழு ஜில்லாக்களும், ஆயிரத்து இருபத்து நான்கு தாலுக்காக்களும் மதக்கோட்பாட்டில் தனிச் சுதந்திரம் பெறவேண்டும். எங்கும் மதப்பூசல் தலை நீட்டக்கூடாது. இந்து முஸ்லீம்கள் யுகயுகாந்திரத்துக்கு ஒன்றுபட்டு, ஒருவரையொருவர் சகோதர நெஞ்சுடன் தழுவிக் கொண்டு வாழச் சட்டம் வகுப்பேன்! ஆனால், வெள்ளைப் பறங்கியன் தனது மதத்துக்காக ஆட்களைப் பிடித்துக் கூலி கொடுப்பதை அறவே கண்டிப்பேன், கண்டிப்பேன்!''

''இவ்வளவுதானா ஹஜூர்?''

''இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. சட்ட திட்டங்களையே மாற்றப் போகிறேன். அவற்றை இப்போதைக்குக் கூறி நேரத்தைக் கடத்துவானேன்? பொதுவாக விவசாயிகள் பற்றியதில் கருணைகாட்ட என்னாலான முயற்சிகளை மேற்கொள்ளப் போகிறேன். தொழிற்கூடங்களை ஸ்தாபிக்கப் போகிறேன். பிரெஞ்சு அரசாங்கத்துடன் இணைந்து 6* கடிகாரத் தொழிற்சாலையையும் காகித ஆலையையும் தோற்றுவிக்க முடிவு செய்திருக்கிறேன். விபசாரத்தை ஒழிக்கப் போகிறேன். விபசாரிகளுக்குத் தூக்குத் தண்டனைவரை வழங்கலாம் என்று சட்டத்தைத் திருத்தப் போகிறேன்....''

இப்புகல்தான். முடிக்கவில்லை. அப்போது மிகவும் அவசரமாக உள்ளே நுழைந்து கொண்டிருந்தான் அந்தரங்கப் பணியாளன் ஹபிபுல்லா. அவனுடைய கையில் புலி முத்திரையிட்ட முடங்கல் இருந்தது.

அதனை நிரம்பவும் பவ்யமாகப் பெரிய கல்தானு பேகத்திடம் நீட்டினான் ஹபி புல்லா.

முத்திரையிலிருந்து அது மகாகல்தான் ஹைதர் அலியிடமிருந்து வந்திருக்கிறது என்பது புரிய வந்தது.

முடங்கலைப் பிரித்து மௌனமாய்ப் படித்து முடித்தாள் பெரிய கல்தானு பேகம் பக்ருன்னிஸா. அவளது முக பாவனையில் அதிர்ச்சி



''உன்னை வேலையிலிருந்து நீக்கிட்ட தற்குச் சந்தோஷப்படறியே?''

''நல்லவேளை, ஜெனரல் மானேஜராக்கி, நிறையச் சம்பளம் கொடுத்துட்டு அப்புறம் நீக்கியிருந்தீங்கன்னு, எவ்வளவு பணம் எனக்கு நஷ்டமாகியிருக்கும்னு யோசித்துப் பார்த்தேன். நல்லவேளை, குமாஸ்தாவா இருக்கும் போதே சீட்டுக் கிழிச்சாங்களேன்னு சந்தோஷப்படறேன்!'' - பிரபு

நிழலாடியது. அதனை மௌனமாகவே தனது குமாரனிடம் நீட்டினாள்.

அவனுடன் அதனைப் பெற்றுக் கொண்ட இப்புகல்தான், வேகமாகப் படித்தான். அவனது கண்கள் எங்கோ சிலவிநாடிகள் நிலைக்குத்தி நின்றன. என்ன நினைத்துக்கொண்டு தந்தையார் இவ்விதம் பிள்ளை விளையாட்டு விளையாடுகிறார்?

விவரம் புரியாது தவித்த ஆளுநர் சையத் முகமதுவைக் குறிப்பாலுணர்ந்து கொண்ட இப்புகல்தான், ''நீங்களும் இதனைப்படியுங்கள். இன்றைய ஸ்ரீரங்கப்பட்டினம் இருக்கிற நிலையில் என்னைக்கூட இங்கு தங்க விடாமல் விரட்டுகிறார் மகாகல்தான். நல்லது: இதில் யோசிக்க ஒன்றுமே இல்லை. தந்தையார் உத்தரவுப்படி இன்று மாலையே நான் மலபார் கடற்கரை நோக்கிப் பயணமாவேன். தலைநகரின் காவலைவிட, மகாகல்தானுக்கு, படையாரும் அதன் வெற்றியும் முக்கியமாய் விட்டன. அந்தப் பறங்கிய மூர்க்கன் ஹம்பர்ஸ்டோனின் கொட்டத்தை எப்போது வேண்டுமானாலும் அடக்கிக் கொள்ளலாமே! ஸ்ரீரங்கப்பட்டினத்து எல்லா முக்கிய அதிகாரிகளையும் அழைத்துக் கொண்டார். நான் மட்டும் ஏன் இங்கு இருக்க வேண்டும் என்று எண்ணி விட்டார், போனும்!'' என்று கூறி நிறுத்திவிட்டுப் பின்னர் அன்னையைக் கவனித்து, ''இது எந்த உற்பாதத்தை நோக்கிப் பயணமாகிறதோ?'' என்று சொல்லிக் கொண்டே தனது வலதுகாலை உட்கார்ந்திருந்த ஆசனத்து முன்னங்காலில் பிணைத்துத் தொடையை ஆட்டிக் கொண்டே சிந்தனை வயப்பட்டிருந்த இப்பு கல்தான், திடுமென்று தன்னை மறந்து எழவே, ஆசனத்து மரக்கால் இடறி, கீழே விழுகிறமாதிரி தெத்திய மகனைக் கண்டு அரண்டுபோன பெரிய கல்தானு பேகம் பக்ருன்னிஸா ''இப்பு!'' என்று அலறி விட்டாள்.

தொடர்ந்து ஒரு துள்ளுத் துள்ளி எழுந்த ஆளுனர் சையத் முகமது, எட்டிப் பிடித்துக் கொண்டார் இப்புவை.

பலகணங்கள் வரை பொறி கலங்கிப் போனான் இப்பு கல்தான். (தொடரும்)

---

4* Permit

5* யாரும் இன்றைய கண்கொண்டு பார்க்கவேண்டாம். இவை யாவும் அன்றைய திப்பு கல்தான் அமுல் படுத்திய திட்டங்களே!

6* இன்றைய பெங்களூர் செமிப்புக்கு அன்றே திப்பு கல்தான் முனைந்திருக்கிறான்.

ஹரித்வார் க்ஷேத்திரத்தின் புனித கங்கையில் நீராடச் சென்றிருந்த போது தான் அவன் சற்றும் எதிர்பாராத விதமாக அவரைச் சந்திக்க நேர்ந்தது. அது ரங்கு சார் தான், சந்தேகமே இல்லை! அவர் தியானம் கலைந்து கண் விழிப்பதற்காகக் காத்திருந்தான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் கண் விழித்த ஸ்வாமிஜி சட்டென்று எழுந்து நின்றார். பெரியவரின் பார்வை தன் பக்கம் திரும்புமா என்று ஆவலுடன் நின்றிருந்தான் மோஹன்.

ஒளிப்பிழம்பாக ஜ்வலிக்க அசைவற்ற விழிகளால் தொலைவில் கங்கைப் பிரவாகம் தொடுவானத்தோடு இணைந்து கலக்கும் காட்சியைப் பார்த்தவாறு சில கணங்கள் நின்றார். பின்பு வேகமாக அங்கிருந்து செல்ல ஆரம்பித்தார். அங்கு அவருடன் பேசவேண்டாம் என்று எண்ணினான் அவன். ஆகவே மோஹன் ஸ்வாமிஜியின் நடைக்குச் சமமாகத் தன் நடையைத் துரிதப் படுத்தியவாறு அவரைத் தொடர்ந்து சென்றான். படித்




துறைப் பாலத்தைக் கடக்கும் போது எதிரே பக்தர் கோஷ்டியொன்று ஆரவாரமாகத் தாளங்களை முழக்கியவாறு நாமசங்கீர்த்தனம் செய்து கொண்டே வந்தது. அந்தக் கூட்டத்தின் இடையே புகுந்து அவன் மறுபக்கம் சென்று ஸ்வாமிஜியைப் பின்தொடர நினைத்த சமயத்தில் அவர் மாயமாக மறைந்திருந்தார். எப்படியோ அவன் கண்களுக்குத் தப்பி அந்தப் புனித கங்கைக்கரையில் அலைமோதிக் கொண்டிருந்த ஜன சமுத்திரத்தில் கலந்து போயிருந்தார்.

அந்த ஸ்வாமிஜி ரங்குசார் தான் என்பதில் மோஹனுக்குச் சந்தேகமே இல்லை. அவரை நேருக்குநேர் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்ததும் அவருடன் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் அவரைத் தவற விட்டுவிட்டோமே என்ற ஏமாற்றத் தவிப்புடன் அவன் தன் ஹோட்டல் அறையை அடைந்தான்.

இன்னும் இரண்டு நாட்களாவது ஹரித்வாரில் தங்க வேண்டிய வேலை அவனுக்கு இருந்தது. அதற்குள் அந்த ஸ்வாமிஜியைச் சந்திக்கும் வாய்ப்பு நேராமல் போகுமா என்ன? மறுநாளே அவர் வழக்கம்போல் அந்தக் கங்கைத் துறைக்கு வந்தாலும் வரலாம். மறுநாள் அவரைத் தவறவிடக் கூடாது என்ற தீர்மானத்துடன் தனது மற்ற வேலைகளில் கவனத்தைச் செலுத்தினான் மோஹன்.

ஹரித்வாரை அடுத்த ராணிபூர் என்னும் இடத்தில் அமைந்த கனரக மின்யந்திரத் தொழிற்சாலையில் ஒரு வாரம் பயிற்சிக்காக அவன் திருச்சியிலிருந்து வந்திருந்தான். திருச்சி திருவெறும்பூர் தொழிற்சாலையில் எஞ்சினியராகப் பணியாற்றி வந்தான் அவன்.

ரங்குசாரின் பிள்ளை ராமதாஸ் திருச்சியில் பெரிய உத்தியோகத்தில் இருந்தான். ராமதாஸும் மோஹனும் பள்ளி நாட்களில் ஒன்றாகப் படித்தவர்கள். ராமதாஸ் திருச்சிக்கு மாற்றலாகி இருக்கிறான் என்று தெரிந்ததும் தானே வலுவில் அவனுக்கு ஃபோன் செய்துவிட்டு அவனுடைய வீட்டுக்குப் போனான். அங்கே ரங்குசாரைச் சந்திக்க முடியும் என்று அவன் எதிர்பார்த்தது வீண் போகவில்லை.

நான்கு ஆண்டுகளுக்கு முன்பு வேலையிலிருந்து ஓய்வு பெற்றதைத் தொடர்ந்து மனைவியையும் இழந்து ஏகாங்கியாகி விட்டிருந்த அவர் தமது ஒரே பிள்ளையான ராமதாஸிடமே வந்துவிட்டிருந்தார். மோஹன் ராமதாஸின் வீட்டுக்குச் சென்றபோது ராமதாஸ் காரியாலயத்திலிருந்து திரும்பி வந்திருக்கவில்லை. ரங்குசார் மட்டும் வெளிவராந்தாவில் பேப்பர் படித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். மோஹன் வரப்போவதைப் பற்றி ராமதாஸ் அவருக்கு முன்பே தகவல் தெரிவித்திருக்க வேண்டும். மோஹனைக் கண்டதும் வியப்பேதும் கொள்ளாமல் இன்முகத்துடன் அவனை வரவேற்றார்.

ரங்குசார் அவனுடன் உரையாட ஆரம்பித்த சிறிது நேரத்துக்கெல்லாம் ராமதாஸ் வந்துவிட்டான். தன்னுடைய இளம் மனைவி லதாவை அறிமுகம் செய்து வைத்தான். அவளும் மோஹனுடன் கலகலப்பாகப் பேசியவாறு எல்லோருக்கும் சிற்றுண்டியும் காப்பியும் கொண்டு வந்து கொடுத்தாள்.

ஆண்டுகள் கடந்தன.

லதா ஒரு பெண் குழந்தைக்குத் தாயான போது ரங்குசாரின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. பேத்தியிடம் அளப்பரிய ஆசை காட்ட ஆரம்பித்தார். மோஹன் எப்போது அவர்கள் வீட்டுக்குப் போனாலும் ரங்குசார் பேத்தியை அன்புடன் அணைத்துக் கொண்டு கொஞ்சிக் கொண்டிருக்கும் காட்சியைக் காண முடிந்தது.

இந்நிலையில் ஒருநாள் ராமதாஸ் வாடிய முகத்துடன் மோஹனிடம் வந்தபோது மோஹன் வியப்படைந்தான்.

''என்ன ராமதாஸ்? ஏன் ஒரு மாதிரி இருக்கிறாய்?''

''அப்பாவை என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை!'' என்று பெருமூச்சுடன் கூறினான் ராமதாஸ்.

''ஏன்? என்ன நடந்தது?''

''இப்போது கொஞ்ச நாட்களாக அப்பா குழந்தை ரேகாவைக் கண்டாலே எரிந்துக்

கொட்டுகிறார். குழந்தையைத் தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்சா விட்டால் போகிறது. அதுவாக 'அவரிடம் தவழ்ந்து வந்தால் கூட அதை அலட்சியம் செய்து விட்டு வேறு பக்கமாகப் போய் உட்கார்ந்து கொள்கிறார். குழந்தை தம்மிடம் வருவதையே அவர் விரும்பவில்லை என்று தோன்றுகிறது. குழந்தை அழுதால் கூட அவர் திரும்பிப் பார்ப்பதில்லை!''

''ஆச்சரியமாயிருக்கிறதே!''

''அளவுக்கு அதிகமாகவே லதா குழந்தைப் பொறுப்பைத் தன்னிடம் விட்டு விடுகிறாள் என்ற மனத்தாங்கலோ என்னவோ அவருக்கு! அவர் மனம் நோகும்படி குழந்தையை அவரிடமே விட்டிருந்தோமே என்று லதா அடைந்த வருத்தம் கொஞ்சநஞ்சமல்ல. என்னிடம் சொல்லிச் சொல்லி ஆற்றாமைப் பட்டாள். இனிமேல் குழந்தையைப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பை அப்பாவுக்குக் கொடுக்கவே மாட்டேன் என்று அவள் சொன்ன போது அவளுக்கு அழுகையே வந்து விடும்போல் இருந்தது.''

நண்பனிடம் தன் ஆற்றாமையைச் சொல்லிக் கொண்டதனாலேயே ஆறுதல் பெற்றவன்போல் ராமதாஸ் எழுந்தான். ''வேலையிலிருந்து ரிடையராகி வீட்டோடு இருப்பவர்களுக்குச் சாதாரணமாக ஏற்படும் மனச்சோர்வு அப்பாவுக்கும் ஏற்பட்டிருக்கிறதோ என்னவோ! அவர் ஓய்வாயிருப்பதை நாங்கள் சுட்டிக் காட்டுகிறோம் என்று தப்பாக நினைத்துவிட்டாரோ என்னவோ! இனிமேல் நாங்கள் ட கவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்!'' என்று பெருமூச்செறிந்தவாறு தன் காரை நோக்கிச் சென்றான்.

ஜாக்கிரதையாகத்தான் இருந்தார்கள் என்று தெரிந்தது. அதன்பிறகு இரண்டொரு தடவை மோஹன் அவர்கள் வீட்டுக்குப் போனபோது ரங்குசார் குழந்தைப் பொறுப்பு இல்லாமல் நிம்மதியாகத் தான் உட்கார்ந்திருந்தார். குழந்தை அவருக்குத் தொந்தரவு கொடுக்காமலிருக்க லதா எவ்வளவு பாடு பட்டுக் கொண்டிருந்தாள் என்று மோஹன் கண்கூடாகக் கண்டான். விளையாட்டுப்போக்கில் கூடக் குழந்தை தம்மை நெருங்குவதை, ரங்குசார் விரும்பவில்லை என்பது அவனுக்கு வியப்பாகவே இருந்தது.

இந்த ரங்கு சாருக்கு என்ன நேர்ந்து விட்டது? ஏன் இப்படி மாறி விட்டார்?

குரங்கிலிருந்து மனிதன் பிறந்தான் என்ற டார்வின் தத்துவத்தை 1859'ம் ஆண்டு டார்வின் ஒரு புத்தகமாக வெளியிட்டார்.

புத்தகத்தின் தலைப்பு என்ன தெரியுமா?

''On the Origin of Species by means of Natural Selection or the preservation of favoured races in the struggle for life.''

அதன்பிறகு சில வாரங்களுக்கு மோஹன் திருச்சியில் இல்லை. எண்ணூர் அனல்மின்சார நிலையத்தில் கொதிகலனில் ஏற்பட்டிருந்த கோளாறு எதையோ பழுது பார்ப்பதற்காக அவன் சென்னையிலேயே தங்கி இருக்க வேண்டி இருந்தது. அந்த வேலையெல்லாம் முடிந்து அவன் திருச்சிக்குத் திரும்பியதும் முதல் காரியமாக ராமதாஸின் வீட்டுக்குத் தான் சென்றான். ராமதாஸூம் லதாவும் அவனை வரவேற்றவிதம் அவனுக்குத் திகைப்பை அளித்தது. எதையோ பறி கொடுத்தது போன்ற தோற்றத்துடன் உற்சாகமிழந்து காணப்பட்டனர் இருவரும்.

''ராமதாஸ்! என்ன விஷயம்? நான் ஊரில் இல்லாதபோது அசம்பாவிதம் ஏதாவது...''

அழமாட்டாத குறையாக ராமதாஸ் நடந்ததை விளக்கினான். தன் தந்தை காசி யாத்திரை போக வேண்டுமென்று பிடிவாதம் பிடித்து, அவனும் லதாவும் அவர் காலில் விழுந்து மன்றாடிக் கேட்டுக் கொண்டும் மனம் மாறாமல், ஒரு மாதத்துக்கு முன்னால் புறப்பட்டுச் சென்று விட்டாரென்று அவன் கூறிய போது மோஹன் அதிர்ந்துபோய்விட்டான்.

அது நடந்து ஆறு மாதங்களுக்கு மேல் ஆகிவிட்டன. போலீசில் தகவல் கொடுத்து விஷயத்தை ரசாபாசமாக்க ராமதாஸ் விரும்பவில்லை. தந்தையைத் தேடிக் கண்டு பிடித்து அழைத்து வர அவன் என்னென்





மகன்: செல்லமா ஒரு தட்டு தட்டினேன்!

அப்பா: தம்பிப் பாப்பாவை உன் தங்கக் கையாலா?...!

மகன்: உங்க எச். எம். டி. வாட்சைச் சுத்தியலால்!''

உ.. ராஜாஜி.

---

னவோ முயற்சிகள் செய்தும் பலனற்றுப் போயின.

ரங்கு சாரை நேருக்கு நேர் பார்த்த பிறகும் நழுவவிட்டு விட்டோமே என்கிற ஏமாற்றம் மோஹனை வதைத்தது. மறுநாள் காலை அதே கங்கைத் துறைக்குச் சென்றான். ரங்குசார் வரவில்லை. அதற்கு மறுநாளும் அப்படித்தான். தன்னைச் சந்திக்க விருப்பமில்லாமல்தான் ரங்குசார் வேண்டுமென்றே வேறிடத்துக்குச் சென்றிருக்க வேண்டுமென்று மோஹனுக்குத் தெளிவாகி விட்டது.

வந்த வேலை முடிந்து விட்டதால் அவன் ஹரித்வாரிலிருந்து புறப்பட வேண்டியதாயிற்று. இவ்வளவு தூரம் வந்து விட்டு ரிஷிகேசத்தைப் பார்க்காமல் திரும்பக் கூடாது என்ற எண்ணத்துடன் பஸ்ஸைப் பிடித்து ரிஷிகேசத்துக்குச் சென்றான். மறு பஸ்ஸிலேயே திரும்பி விடலாமா என்று நினைத்தவனுக்கு அந்தப் பஸ்ஸில் இடம் கிடைக்காததால் அங்கு ஒரு நாளாவது தங்கி ஆகவேண்டும் என்ற நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது. அந்த நிர்ப்பந்தமே நன்மையாக முடிந்தது. லக்ஷ்மண ஜூலாவுக்கருகே ரங்குசார் அவனைத் தவிர்த்துச் செல்ல முடியாத விதத்தில் நேருக்கு நேர் எதிர்ப்பட்டார்.

ஹரித்வாரில் செய்த மாதிரி அவனைக் கண்டு கொள்ளாதவர்போல் அவர் அவனைத் தாண்டிச் சென்று விடவில்லை. நின்று அவனைக் கனிவுடன் பார்த்தார். கண்களில் நீர் மல்க, சாஷ்டாங்கமாக அவரை நமஸ்கரித்து எழுந்தான் மோஹன்.

''என்னைத் துரத்திக் கொண்டு இங்கேயும் வந்து விட்டாயா?'' என்று கேட்டார் அவர் புன்னகையுடன்.

''உங்களை இங்கே சந்திக்கப் போகிறேன் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை!''

''உண்மை என்ன தெரியுமா மோஹன்? உன்னை நேருக்கு நேர் சந்திக்க விருப்பமில்லாமல்தான் நான் ஹரித்வாரிலிருந்து புறப்பட்டு இங்கே வந்தேன்'' என்று கூறியவர் பெருமூச்செறிந்தவாறு அருகிலிருந்த ஒரு பாறை மீது உட்கார்ந்து கொண்டு மோஹனையும் உட்காரும்படி கூறினார்.

திடீரென்று மோஹனுக்கு எப்படி அந்தத் துணிவு வந்ததோ! நேரடியாக அவரைக் கேட்டே விட்டான்! —

''பந்தங்களையெல்லாம் அறுத்தெறிந்து விட்டு வரும்படியாக உங்களுக்கு ஏன் தோன்ற வேண்டும்? குழந்தையைப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பு உங்களுக்குக் கஷ்டமாக இருக்கிறதென்று சொன்னால் யார் உங்களைக் கட்டாயப்படுத்தப் போகிறார்கள்! அதற்காக அவர்களிடம் கோபித்துக் கொண்டு வந்தது எந்த விதத்தில் நியாயம்?''

மெல்லச் சிரித்தார் பெரியவர்.

''உனக்குப் புரியாதுதான். விளக்கமாகச் சொல்கிறேன். ஆனால் அதற்கு முன் ஒரு நிபந்தனை. இதைப்பற்றி நீ யாரிடமும் எதுவும் சொல்லக் கூடாது. ராமதாஸூம் லதாவும் என் விஷயமாக என்ன நினைத்துக் கொண்டிருந்தாலும் சரி, நான் சொல்லப் போகும் உண்மைக் காரணம் அவர்களுக்குத் தெரியவே கூடாது!''

''உங்கள் நிபந்தனையைக் காப்பாற்றுகிறேன்!'' என்று உறுதியளித்தான் மோஹன்.

சற்றே தலையைத் தாழ்த்திக் கண்களை மூடிக் கொண்டு இரு புருவங்களையும் விரல்களால் அழுத்திப் பிடித்தவாறு சிந்தனையில் ஆழ்ந்திருந்த ரங்குசார் சட்டென்று கண்களைத் திறந்து தலைநிமிர்ந்தார்.

''உனக்கே தெரியும், ஆரம்பத்தில் என் பேத்தியிடம் நான் எவ்வளவு ஆசையாயிருந்தேனென்று!''

''அந்த ஆசை பின்னால் எப்படி அவ்வளவு விரக்தியாக மாறியது என்பதுதான் புதிராயிருக்கிறது!''

''இந்தப் புதிரைப் புரிந்து கொள்ளவேண்டுமென்றால், நான் என் பிள்ளையிடம் வந்து சேர்ந்தபோது என்மனநிலை எப்படி இருந்தது என்பதை நீ புரிந்து கொள்ள வேண்டும். என் மனைவி காமாட்சி மறைந்து அப்போது சில மாதங்களே ஆகியிருந்தன. காமாட்சியைப் பிரிந்து என்னால் வாழவே முடியாது என்னும் அளவுக்கு அவளிடம் உயிராயிருந்தவன் நான். அவள் மறைந்த பிறகும் அவள் நினைவாகவே இருந்தேன். அடிக்கடி என் கனவில் தோன்றினாள் அவள். ஒவ்வொரு தடவையும், 'நீங்க வருத்தப்படாதீங்கோ, நான் சீக்கிரமே உங்ககிட்டே வந்துடப் போறேன்' என்று அவள் எனக்கு ஆறுதல் சொல்வது போல் இருந்தது. லதா ஒரு குழந்தைக்குத் தாயாகப் போகிறாள் என்ற செய்தியை அறிந்ததும் தான் எனக்கு என் கனவின் அர்த்தம் புரிந்தது. அதன் பிறகு என் கனவில் காமாட்சி தோன்றும்போது அவளுடைய வார்த்தைகள் அதையே வலுப்படுத்துவதாக இருந்தன.— 'லதாவின் வயிற்றில் நான்தான் வளர்ந்து கொண்டிருக்கிறேன். இரண்டொரு மாசத்தில் உங்களுக்குப் பேத்தியாக வந்து பிறக்கப் போகிறேன்...'

''லதாவுக்குப் பெண் குழந்தை பிறந்த போது நான் அடைந்த சந்தோஷத்துக்கு எல்லையே இல்லை. காமாட்சியே மறுபிறவி எடுத்து வந்திருக்கிறாள் என்று மனம் பூரித்தேன். அதற்கேற்றாற்போல் ராமதாஸூம் சம்பிரதாயப்படி தன் தாயாரின் பெயரையே

குழந்தைக்கு வைத்தான். லதா, தான் குழந்தையை அழைக்க வேண்டும் என்பதற்காக ரேகா என்ற மாற்றுப் பெயரை வைத்திருந்தான். குழந்தையைக் கையில் எடுத்தணைத்துக் கொஞ்சும் போதெல்லாம் எல்லையில்லாத உவகை என் உள்ளத்தை நிறைத்தது. 'ரேகா' என்ற பெயரைச் சொல்லாமல் 'காமாட்சி' என்ற பெயரைச் சொல்லிக் குழந்தையை அழைப்பதுதான், எனக்குப் பிடித்திருந்தது. அந்தப் பெயரைச் சொல்லி அழைக்கும் இன்பத்துக்காகவே குழந்தையை எப்போதும் என்னிடமே வைத்துக் கொள்ள ஆசைப்பட்டேன்...''

''பேத்தியைக் கொஞ்சும் இன்பத்தில் மனைவியை இழந்த துக்கத்தைக் கூட நீங்கள் மறந்திருப்பீர்கள்!''

''உண்மைதான். மனைவியின் மறைவை நினைத்து மருகிக் கொண்டிருந்த நிலை மறைந்து விட்டது. காமாட்சி என் கனவில் தோன்றுவதும் நின்று விட்டது. இதை நான் முதலில் உணரவில்லை. ஆனால் ரேகா ஆறு மாதக் குழந்தையாக வளர்ந்து தவழ்ந்து விளையாட ஆரம்பித்த சமயத்தில் திடீரென்று ஒருநாள் அந்த உணர்வு எனக்கு ஏற்பட்டது!''

மேலே பேசத் திணறுபவர் போல் சில விநாடிகள் மௌனமாகி விட்ட பெரியவர், தம்மைச் சமாளித்துக் கொண்டு தொடர்ந்தார்...

''குழந்தையை என் பேத்தியாக அல்ல. மறுபிறவி எடுத்த மனைவி காமாட்சியாக நினைத்துத்தான் தூக்கி வைத்துக்கொண்டு மேலிட மனமில்லாமல் கொஞ்சிச் சீராட்டினேன் என்ற உண்மை என் உள்ளத்தைத் தாக்கி என்னை அதிர வைத்தது. குழந்தையும் வேறு யாரிடமும் போகாமல் என்னிடமே ஓடி ஓடி வந்ததற்கும் ஒரு புதிய அர்த்தம் இருப்பது போல் எனக்குத் தோன்றியது. என் மனமே என்னைக் குற்றம் சாட்டியது. குழந்தையைத் தீண்டவும் அஞ்சினேன். திரும்பிப் பார்க்கவும் கூசினேன். என் மனத்தில் வேரூன்றிப் படர்ந்த விபரீதமான பாசத்தை அறுத்தெறியத் துடித்தேன். அந்தக் குழந்தையைக் கிட்டே வரவிடாமல் ஒதுக்கினேன். யாராவது வலிய அந்தக் குழந்தையை என்னிடம் கொடுக்க வந்தாலும் எனக்கு உடம்பெல்லாம் பற்றியெரிவது போல் இருந்தது...''

படபடவென்று பேசிய அவருக்கு உடம்போடு நடுங்கியது. சட்டென்று எழுந்து நின்றார். மோகனும் பரபரப்புடன் எழுந்தான்.

''இதெல்லாம் என் பிரமையாக இருக்கலாம். மதிமயக்கமாக இருக்கலாம். ஆனால் அதன் உறுத்தல் என்னை வதைத்தெடுத்தது. அந்த உறுத்தலின் தீவிரம் அதிகமாகி ஓர் எல்லையை மீறியதும் என்னால் தாங்க முடியவில்லை. அந்த மாயைச் சுழலிலிருந்து என்னை விடுவித்துக் கொண்டு ஓடிவிடத் துடித்தேன். என்னையறியாமலே என்னைச் சுற்றி வளைக்க இருந்த விபரீதமான பாசப் பிணைப்புக்குப் பயந்து ஓடினேன். இன்னும் ஓடிக்கொண்டே இருக்கிறேன்!''

ரங்குசார் அதற்குமேல் அங்கு நிற்கவில்லை. இக்பிரமை பிடித்தாற்போல் நின்றிருந்தான் மோகன்.

# கிரிக்கெட் கற்கலாம்! 26

தொகுப்பு: கே. சந்திரசேகர்

படம்: ராஜு

தயாரிப்பு: குண்டுமணி

## ஆப் ஸ்பின்!

ஆப் ஸ்பின்னுக்குப் பெரும்பாலும் கட்டைவிரலுக்கு அடுத்த சுட்டுவிரலும் நடுவிரலும் (1 & 2 படம்) இரண்டு விரல்கள் இயக்கமே முக்கியம். அதிலும் சுட்டு விரல் இயக்கம் மிகத்தேவை.






ஆப் பிரேக்குக்குப் பந்து கடிகார முள்ளைப் போல (CLOCK WISE) சுழல வேண்டும். இடது பக்கமிருந்து வலது பக்கமாக. கையின் இயக்கம் கதவைத் திறக்கும் கதவுக் குமிழியைச் சுழற்றுவது போலத்தான்!

ஆப் பிரேக், விக்கெட் (A) அருகிலிருந்து, விக்கெட்டைச் சுற்றி (B) வீசும் போது ஏற்படும் திசை திருப்பலே!






ஆரம்ப ஆப் ஸ்பின்னர்கள் வெங்கட ராகவனின் ஆப்ஸ்பின் பந்து வீச்சைத் தொடர்ந்து கவனித்தால் 'முன்னேற' வழியுண்டு.

ஆஸ்ப்ரோ இருமடங்கு விரைவாக வலியிலிருந்து நிவாரணமளிக்கிறது. ஆம் இருமடங்கு விரைவாக!




மைக்ரோ:.பைண்ட் ஆஸ்ப்ரோ, தலைவலி, உடல்வலி, பல்வலி, ஜலதோஷம் மற்றும் ஃப்ளுவிலிருந்து நிவாரணமளிக்கிறது.

பெரியவர்களுக்கு
2 மாத்திரைகள்

மைக்ரோ:.பைண்ட்
ஆஸ்ப்ரோ
Nicholas

காரணம்
ஆஸ்ப்ரோ ஒன்றுதான் மைக்ரோ:.பைண்ட் செய்யப்பட்டது.

---

Who Makes Most Trusted Yarn?
CENTURY ENKA, of course!

**World-famous Enkalon nylon yarn made in India to the highest international standards by**

# CENTURY ENKA

Fast, flawless, fabulous for the exciting world of fashion

The quality yarn that weaves faultless fabrics

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

## ராஜ்மோகன் காந்தி

"கிராம மக்களை அவர்களுடைய இல்லங்களிலிருந்து வெளியேற்றி வேறு இடத்துக்குப் போகச் சொல்ல முடியுமா? அவர்களால் இருக்குமிடத்தை விட்டு நகர முடியாது. அவர்களுக்கு வேலை வாய்ப்பை அவர்கள் வாசலுக்கே நாம் கொண்டு சென்று தர வேண்டும். பசிப் பிரச்னையை இந்தியாவைத் தொழில் மயமாக்குவதன் மூலம் தீர்க்க முடியாது: இந்தியர்களை உழைப்பாளிகளாக்குவதன் மூலம்தான் தீர்க்க முடியும். 1

"மில் துணியை விடக் கதர் விலை உயர்வானதுதான்; ஆனால் மில் துணி அணிவது ஆபாசமானது. ஏழை மக்களின் நலனில் அக்கறை காட்டாதிருப்பது ஆபாசமே."

"நீங்கள் கதரைச் சுமந்து சென்று விற்கிறீர்கள். உங்களுக்கு என்ன கூலி கிடைக்கிறது?" என்று கிண்டல் போர்வழியான ஒரு மாணவன் கேட்டான்.

"உங்களில் சிலரைக் கதர் அணியுமாறு வற்புறுத்தினேன் என்ற மனத்திருப்தி தவிர வேறு கூலி ஒன்றும் கிடையாது அப்பனே!" என்று பதிலளித்தார் ஸி. ஆர்.

"இது பிற்போக்கான காரியம்" என்று ஆடிகையான ஒரு மாணவன் பதிலடி தந்தான். "ஆமாம். பிற்போக்கான காரியம் தான்" என்றார் ஸி. ஆர்., "அயோக்கியனை ஒருவனை யோக்கியமான பாதைக்குத் திருப்புவது எவ்வளவு பிற்போக்கோ அவ்வளவு பிற்போக்கானது!" 2 இதைக் கேட்டு அவையினர் கரகோஷம் செய்தனர்.

மகாதேவதேசாய் தமது நாட்குறிப்பில் "ஒரு பேச்சு இதைக் காட்டிலும் உடனடிப் பலன் தந்து இதற்கு முன் நான் பார்த்ததே இல்லை" என்று எழுதினார். 3 செஷயர் தாமே கதர் அணிய முன் வந்தார். பல மாணவர்களும் அவ்வாறே செய்தனர். பல கெஜம் துணி அந்த இடத்திலேயே விற்றுப் போயிற்று. மாணவர்கள் கதர் சங்கம் அமைக்கப்பட்டது.

1926ல் சுயராஜ்யக் கட்சிக்கு மறுபடியும் காயம் ஏற்பட்டது. முதலில் மகாராஷ்டிரர்கள், இந்திய தேசிய காங்கிரஸானது அரசுடன் பலன் தரத்தக்க விதத்தில் ஒத்துழைத்துப் பழக வேண்டும் என்றனர். பிறகு ஆகஸ்டில், லஜபதிராய் சுயராஜ்யக் கட்சியை விட்டு வெளியேறி, ஹிந்துமதச் சார்புள்ளதான, சுதந்திர காங்கிரஸ்கட்சியை அமைக்க மாளவியாவுக்கு உதவினார். இது, முஸ்லீம்கள் தங்கள் மேலாதிக்கத்தை நிலைநாட்ட முயன்றதன் விளைவு. முகமது அலி, இஸ்லாமிய மதத்தவராக காந்தியை மாற்றிவிடத் தாம் மேற்கொள்ளும் முயற்சி வெற்றி பெறப் போகும் தினத்துக்காகத் தாம் பிரார்த்தித்து வருவதாகக் கூறியிருந்தார்!

"படிப்பறிவுள்ள இந்தியர்கள்தாம் தனித் தனி கட்சிகளாகப் பிரிந்து நிற்கிறார்கள்" என்றார் மகாத்மா. "அவர்களது செயல் திட்டம் எனது செயல் திட்டம் அல்ல. நான் அடித்தளத்திலிருந்து மேலே கட்டடம் எழுப்ப முயலுகிறேன். அவர்கள் மேலிருந்து கீழாகச் செயல்படுகிறார்கள்." 4

1926–27க்கு காங்கிரஸ் அக்கிராசனராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த சீனிவாச அய்யங்காரும் மோதிலால் நேருவும் நவம்பர் தேர்தல்களுக்கு ஸி. ஆரின் உதவியை நாடினார்கள். ஸி. ஆருக்கு அனுப்பிய தந்தியில் மோதிலால் நேரு சொன்னார்: "மகாராஷ்டிரம், மத்திய மாகாணங்கள், உத்தரப்பிரதேசம் ஆகிய மாகாணங்களில் முக்கிய கேந்திரங்களுக்கு நீங்கள் விஜயம் செய்து காங்கிரஸ் வேட்பாளர்களுக்கு ஆதரவாகப் பேசினால் நன்றியுடையவனாக இருப்பேன்." 5

சீனிவாச அய்யங்கார் பின்வருமாறு எழுதினார்: "மகாராஷ்டிரம், மத்திய மாகாணங்கள், உத்தரப் பிரதேசம் ஆகியவற்றில் காங்கிரஸின் கௌரவமும் கட்டுக் கோப்பும் கட்சிக் கட்டுப்பாட்டை மீறுகிறவர்களால் வேண்டுமென்றே சிதற அடிக்கப்படுகின்றன. நீங்கள் அசைந்து கொடுத்து, இந்நிலைமையைச் சீர்ப்படுத்த ஆதரவு தரவேண்டும். நீங்கள் இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு வார்த்தை சொன்னாலும் அதனால் ஓர் ஆரோக்கியமான நற்பலன் ஏற்படும்." 6



ப. சுப்பராயன்

சுயா காங்கிரஸின் போது ஏற்பட்ட பிளவுக்குப் பிறகு மோதிலால் நேரு முதன் முதலாக ஸி. ஆரை அணுகியது இப்போது தான். ஆனால் ஸி. ஆருக்குத் தேர்தலினால் உற்சாகம் ஏதும் ஏற்படவில்லை. மோதிலால் நேரு – லஜபதிராய் சண்டையில் தாமும் சிக்கிக் குழம்புவதை அவர் விரும்பவில்லை. இருப்பினும் அவர் சென்னை மாகாண வாக்காளர்களைக் காங்கிரஸ் வேட்பாளர்களுக்கு – அதாவது சுயராஜ்யக் கட்சியினருக்கு – வோட்டுப் போட்டு ஆதரிக்குமாறு சக்தி வாய்ந்த விதத்தில் கேட்டுக் கொண்டார்.

---

1. மகாதேவ தேசாய் டயரி, பாகம் 8, பக்கம் 355
2. மேற்படி, பக்கம் 356.
3. மேற்படி
4. டெண்டுல்கர், மகாத்மா, பம்பாய், 1951, பாகம் 2, பக்கம் 309
5. மோதிலால் நேரு ஸி. ஆருக்கு எழுதியது 3-10-26, SN 11333, ராஜ்காட் சங்கிரஹாலயம்.
6. ஸ்ரீனிவாச அய்யங்கார் ஸி ஆருக்கு எழுதியது 4-10-26, SN 11334 ராஜ்காட் சங்கிரஹாலயம்.

அது கணிசமான அளவில் வேட்பாளர்களின் மதிப்பை உயர்த்தியது.

சென்னை சுயராஜ்யக் கட்சியினர் சீனிவாச ஐயங்கார் தலைமையின் கீழ் ஐக்கியப்பட்டுத் தீவிரமாக இயங்கியதில் தேர்தலில் நல்ல முடிவுகளைக் கண்டனர். ஆனால் நாட்டின் பிற பகுதிகளில் சுயராஜ்யக் கட்சியினர் நிலை இப்படி இருக்கவில்லை. உத்தரப்பிரதேசத்திலும் பஞ்சாபிலும் கட்சி படுதோல்வி அடைந்தது. வருடாந்திர மகாநாட்டுக்குக் காங்கிரஸ் கௌஹாத்தியில் கூடியபோது சட்டசபைப் பிரவேச மோகம் ரொம்பவும் குறைந்து போய்விட்டிருந்தது.

சென்னை சட்டசபையில் ஜஸ்டிஸ் கட்சியினரை விட அதிகமான இடங்களை சுயராஜ்யக் கட்சியினர் பெற்றனர். ஆனால் அவர்கள் மந்திரிசபை அமைப்பதில்லை என்று பிரமாணம் எடுத்துக் கொண்டிருந்தனர். ஜஸ்டிஸ் கட்சியினரின் ஆட்சி அமைந்துவிடக் கூடாது என்பதற்காக இவர்கள், சுயேச்சைகள் அடங்கிய ஒரு மந்திரிசபைக்குத் தங்கள் ஆதரவை அளித்தனர். இந்தச் சுயேச்சையாளர்களின் தலைவராக விளங்கியவர் டாக்டர் ப. சுப்பராயன். இவர் ஸி. ஆரின் நண்பர், திருச்செங்கோடில் பக்கத்திலேயே வாழ்ந்தவர். சுயராஜ்யக் கட்சியினரின் இந்த முடிவை ஸி. ஆர்., எதிர்க்கவில்லை. புதிய அரசு மதுவிலக்கை அமல்படுத்தும் என அவர் நம்பினார்.

இரண்டு அல்லது மூன்று மாவட்டங்களில் பூரண மதுவிலக்கு அமல்படுத்த ஒரு திட்டத்தை ஸி. ஆர். ஜனவரி மாதம் வகுத்துத் தந்தார். இதையொட்டி சட்டசபையில் தாக்கல் செய்ய ஒரு மசோதாவையும் அவர் தயாரித்தார். ஏப்ரலில் அது யங் இந்தியாவில் பிரசுரமாயிற்று. ஆனால் இம்மசோதா சென்னை அரசாங்கத்துக்கு ஏற்புடையதாக இருக்கவில்லை!

அன்று நடந்த இரட்டை ஆட்சியில் மக்களால் தேர்ந்தெடுக்கப் படாத பாதிப்பேர் அதிகச் செல்வாக்குப் பெற்றிருந்தனர். அவர்கள் மதுவிலக்கை எதிர்த்தனர். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த சுயேச்சைகளோ மதுவிலக்கின் நன்மைகள் பற்றி அவ்வப்போது பேசி வந்தாலும் அதனைச் சட்டபூர்வமாக அமல்படுத்தும் அளவுக்கு அதில் நம்பிக்கை கொள்ளவில்லை.

## 26. விடுமுறையில் மகாத்மாவுடன்

ஸி. ஆருடன் கலந்தாலோசித்த பிறகு, மகாத்மா, 1927ம் ஆண்டின் ஒரு கணிசமான பகுதியைத் தென்னிந்தியச் சுற்றுப்பயணத்தில் கழிக்கத் திட்டமிட்டார். கதர் பிரசாரம் அவரது நோக்கமாக இருந்தது. மிகக் கடினமாக உழைத்து வந்த காந்தி, தெற்கே வரும் வழியில், மார்ச் இறுதியில் செயலற்று உணர்வற்றுப் போகிற ஓர் ஆபத்தான உடல் நிலையிலிருந்து அதிர்ஷ்டவசமாகத் தப்பினார். பம்பாய் மாகாணத்தில் நிபானி என்ற ஊரில் மகாத்மா படுத்திருந்த கட்டிலுக்கு அருகே வந்து சேர்ந்த ஸி. ஆர்., அவர் மைசூர் ராஜ்யத்தில் ஓய்வெடுத்து உடல் தேறலாம் என்று யோசனை சொன்னார்.

மைசூரில் மகாராஜாவும் திவானும் நிச்சயம் தங்களை நட்புறவுடன் வரவேற்று உபசரிக்கத் தயாராக இருப்பார்கள் என்று ஸி. ஆர். கருதினார். யோசனையை ஏற்ற மகாத்மா, அந்த சமஸ்தானத்தில் மூன்று மாதங்கள் தங்கியிருந்து ஓய்வெடுத்துக் கொண்டார். முதலில் பெங்களூரிலிருந்து 35 மைல் தொலைவில் இருந்த நந்தி குன்றுகளில் தங்கினார். பின்னர் பெங்களூரிலேயே தங்கியிருந்தார். இரு இடங்களிலும் அவர் மகாராஜாவின் விருந்தினராகவே இருந்தார். ஸி. ஆரும் உடனிருந்தார். நரசிம்மனும் லக்ஷ்மியும் அவரோடு வந்திருந்தனர்.

காந்தியுடன், கஸ்தூரிபா, மகாதேவ் தேசாய், தேவதாஸ் ஆகியோரும் இருந்தனர். எல்லாருமாக ஏப்ரல் பாதம் பிற்பகுதியில் நந்தி குன்றுகளை அடைந்தனர். வரும் வழியில் தங்கி நின்ற இடங்களிலெல்லாம் மகாத்மாவுக்கு ஆட்டுப்பால் கிடைக்குமாறு ஸி. ஆர். பொறுப்பேற்றுக் கவனித்துக் கொண்டார்.

4800 அடி உயரமுள்ள நந்தி குன்றுகளில் சூரியாஸ்தமனத்தின் போது மேக மண்டலங்கள் அற்புத அழகுடன் விளங்கின. ஓசோன் நிலை பலம் தருவதாக இருந்தது. இரண்டு வாரங்களில் காந்தியின் உடல்நிலையில் அபிவிருத்திக்கான திருப்பம் ஏற்பட்டது. நடையில் ஒரு துள்ளல் காணப்பட்டது. ஸி. ஆர். ஒரு சிறை அதிகாரி மாதிரி இருந்து அவரைப் பாதுகாத்தார். மகாத்மாவைக் காண வருவோரைத் தடுத்தார். ரொம்ப அவசியமானால் மட்டுமே காண அனுமதித்தார். பேட்டிகளைச் சீக்கிரமாக முடிக்கச் செய்தார்.

(தொடரும்)

தமிழாக்கம்: கெ. ராஜேந்திரன்



---

ஜெயிலாத்தில் சிறைக் கைதிகளுக்கு ஒரு சலுகை உண்டு. தினமும் கொஞ்ச நேரம் அவர்கள் தத்தம் கிராமங்களுக்குச் சென்று நிலத்தில் உழுது, பயிர்த் தொழில் செய்யலாம். அப்படிப்பட்ட கைதிகள் குறிப்பிட்ட நேரத்தில் சிறைக்குத் திரும்பிவிட வேண்டும்.

ஒருமுறை ஒரு கைதி சற்றுத் தாமதமாகச் சிறைக்குத் திரும்பியபோது வார்டன் இவ்வாறு குறிப்பிட்டார்: ''அடுத்த முறை நீ தாமதமாக வந்தால், உன்னை உள்ளேயே விடமாட்டேன், ஜாக்கிரதை.''

—சாகா.' —ராமு.






கொசுவை
விரட்டும்,
உறுதியாக.—
**டார்டாய்ஸ்** கொசு
வர்த்திச் சுருள்.




எப்போதும்
கவனத்திலி
ருக்கட்டும்...
**டார்டாய்ஸ்** கொசு
வர்த்திச் சுருள்.




இரவுதோறும் ஒரு
டார்டாய்ஸ் கொசுவர்த்திச்
சுருள்—பறந்து போகும்
கொசுக்களெல்லாம்.

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.



தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
:போர்ட், பம்பாய்-400 023. :போன்: 273831

# கனவா-நிஜமா? 10

கதை: வாண்டுமாமா
சித்திரம்: செல்லம்












அன்று இரண்டாம் முறையாக வெங்கைமார்பன் அங்கு வருவதைக் கண்ட சிறைக் காப்பாளருக்குச் சந்தேகமும் தயக்கமும் ஏற்பட்டன.

இளவரசே! தாங்கள் அந்தக் கைதியைக் காண்பதற்கு ஆட்சேபணையில்லை. ஆனாலும் அவனை அவன் அறையை விட்டு வெளியே அனுப்ப எனக்கு அதிகாரமில்லை.

மன்னரின் தம்பியான நான் கேட்கும் போது நீங்கள் யோசிக்க வேண்டியதே இல்லை

சிறைக் கோட்டையின் கொத்தளத்துக்கு தீவன் அழைத்து வரப்படுகிறான். அங்கு வெங்கைமார்பனுடன் ரணமல்லனைக் கண்டதும் தீவன்...

ரணமல்லா...!

என் பெயர் உனக்கு எப்படித் தெரிந்தது? இதுவரை நான் உன்னைப் பார்த்ததே இல்லையே!

பத்து வருஷங்களுக்குப் பிறகு நீ என்னைச் சந்திக்கப் போகிறாய். சந்திரவக்ரனின் கொடுங்கோலாட்சியை எதிர்த்துப் புரட்சி செய்பவர்களில் தப்பிப் பிழைக்கப் போகிறவன் நீ ஒருவன்தான். மிருகங்களைப் போல மலைக்குகையில் ஒளிந்து வாழப் போகிறாய்...

தப்பிப் பிழைக்கப் போகிறேனா? குகையில் ஒளிந்து வாழப்போகிறேனா?... நீ ஒரு பைத்தியக்காரன் என்பதில் சந்தேகமே இல்லை

அப்போது தீவன் தன் கூற்றுக்கு ஆதாரமாக...

உன்னுடைய வலது தோளில் ஒரு பெரிய தழும்பு உள்ளது... உண்மையா?

ஆமாம்...ம்...ம்... அது... அது உனக்கெப்படித் தெரியும்?

என் தோளிலுள்ள அந்த விழுப்புண்ணை யாரும் பார்த்ததே இல்லை. அது பிறர் பார்வையில் படாதபடிக்கு நான் கவனமுடனிருப்பவன்... அப்படியிருக்க உனக்கெப்படி அது தெரிந்தது?

வருங்காலத்தில் அதாவது பத்தாண்டுகளுக்குப் பிறகு, உடலை மறைக்கப் போதுமான ஆடை கூட இல்லாதபடிக்கு நீ கேவலமான நிலையில் மலைக்குகைகளில் வாழப் போகிறாய்.

ரணமல்லா... இவன் கூற்றில் ஏதோ ஒருவித உண்மை இருக்கிறது. ஏற்பதற்கான ஆதாரமாக இவ்வளவு போதும். இந்தப் பாதாளச் சிறையிலிருந்து இவனை நாம் விடுவிப்போம்.

## மும் முகம் எங்கள் மோகம்

ஒட்டி நின்ற நாம் இருவர்...
உறவுக்கொரு கடல், ஒன்றுபட்ட உணர்வு.
கட்டழகர் அவர் நெஞ்சம் கடலாழம்,
சட்டையோ கடல் நீலம்... அதற்கு
ஒட்டி இசைந்திடுதே என் உடுப்பு;
தொட்டணைக்குதடி அலைக்கரங்கள்.




என்றும் அவர்கள் ஆடை... இயற்கையாக மபத்லால்.

**மபத்லால் துணிவகைகள்:**

சூட்டிங் • ஷர்ட்டிங் • சேலைகள்
•டிரெஸ் மெட்டீரியல்ஸ் • ஷர்ட்



# தொண்டன்

## ராஜேந்திர குமார்

"ஆத்தா!" பின் தொடர்ந்தான் வைரவன். "ஐய. ஆத்தா"

"என்...னடா?" சட்டி நீரை வீசி விட்டுத் திரும்பினாள் வள்ளியம்மை. "ஏண்டா நாளு முச்சூடும் என் பின்னாலேயே அலையுதே? என்ன வேணுமாம்?"

"ஆறு ரூவா பணம் கொடேன்."

"ஆறு ரூவாயா?" நின்று திரும்பிப் பார்த்தாள். "அதென்ன புள்ளே அம்புட்டுப் பணம் கேட்குதே? நேத்துத்தான் முடிவெட்ட முக்கா ரூவா கொடுத்தேன்?"

"அது இருக்குது ஆத்தா. எனக்கு வேறே ஒரு செலவு இருக்கு. எனக்கு மாலை வாங்கணும் ஆத்தா."

"மாலையா? எதுக்கு?" — வியந்தாள்.

• • •

கூட்டம் ஒற்றுமையாகக் கைதட்டியது.

மாலை போட்டுக் கொண்ட தலைவர் தமிழ்ப் பெருங்கோ போட்டோவுக்கு முகம் காட்டிச் சிரித்தார்.

வட்டச் சார்பில் கைத்தறி ஆடை போர்த்தப் பட்டது.

ஒருவனின் (அழுக்கு) குழந்தையை வாங்கி 'கவுதமன்' என்று பெயரிட்டார். முத்தமிட்டு விட்டுப் பத்து ரூபாயை நிதிக்காகப் பெற்றுக் கொண்டார். என்ன நிதி? யோசித்துத்தான் சொல்ல வேண்டும். அவரது வசூல் நிதிகளின் பட்டியல் மிகவும் நீளமானது.

கூட்டம் முடிந்ததும் படி இறங்கினார். ஒவ்வொரு குடிசையாக நுழைந்து கும்பிட்டார். குறைகளைக் கேட்டுக் கொண்டார். மனுக்களைப் பெற்றுக் கொண்டார்.

தனக்குக் குடிக்கக் கொடுத்த பால் தம்ளரை வைத்து "ஏழைப் பாட்டாளி வர்க்கம் சோற்றுக்கு அல்லாடும் போது எனக்கு மட்டும் பாலா? தாழ்த்தப்பட்டோர் இனமும் பால் குடிக்கும் நிலை வந்தால்தான் கடைசிக் 'குடி'மகனாக நான் பால் குடிப்பேன்" என்று வெக்சரடித்தார்.

பாலைப் பதமாக ஆற்றி, குடிசை வாசலில் நின்ற ஒரு நிர்வாணச் சிறுவனை அன்புடன் அணைத்துக் குடிக்க வைத்துப் போட்டோகிராபரைப் பார்த்தார் — அர்த்தத்துடன்.

ப்ளாஷ்கள் மின்னின. மின்னி மின்னி அடங்கின.

"தமிழ் முரசுக்கு அனுப்பு" என்று ரகசிய உத்தரவிட்டுக் காரில் ஏறிக் கொண்டு சேவித்தார்.

'வாழ்க வாழ்க' இரைச்சலுடன் அவரது சூறாவளிச் சுற்றுப்பயணம் மீண்டும் தொடங்கி விட்டது.

• • •

"வீட்டைத் தொறந்து போட்டு எங்காச்சும் போயிராதேடா ராசா. நான் வெள்ளன போயி மொளகா அரைத்துப் போட்டு வருதேன்."

"ஆத்தா" — தயங்கினான். "கேட்டேனே?"

"என்னடா அது?"

"ஆறு ரூவா."

"அட பொழைக்க மாட்டாதவனே. எங்கிட்டே ஏதுடா அம்புட்டு ரூவா? எதுக்குப் புள்ளே இப்ப மாலை வாங்கணும்?"

"ஊருக்குள்ளாற தலைவரு வராரு. நல்ல மனுசன். ஊருக்கு நிறைய நல்லது பண்ணி இருக்காக. பெரிய தமிழ்ப் புலவரு. அவருக்கு மருவாதி காட்டத்தேன்!"

"மருவாதி காட்டணும்னு காலைத் தொட்டுக் கும்பிடு புள்ளே. அதுக்கு மிஞ்சி மருவாதி என்ன இருக்குதுங்கறேன்? நான் போயிட்டு வாரேன். பராக்குப் பார்க்கப் போயிடாம வீட்டைப் பார்த்துக்க."

அவள் போனதும் அலுப்புடன் குடிசை வாசலில் அமர்ந்து சாய்ந்து கொண்டான். சோர்வு தட்டிப் போன முகத்துடன் பார்த்தான்.

செம்மண் பாதை. கண்ணுக் கெட்டிய தூரம் வரை வெய்யில் சூடு பரப்பிக் கொண்டிருந்தது.

நினைவு அசைந்தது. போன வருஷம் பள்ளி ஆண்டு விழாவில்...

அந்தத் தமிழ்த் தலைவர் புன்னகையுடன் சாய்ந்தவாறு இருக்க... பக்கத்தில் ஹெட்மாஸ்டர் கூச்சத்துடன் நாற்காலி நுனியில் தொற்றியவாறு அமர்ந்திருக்க...



ஹங்கேரியிலுள்ள டெப்ரெகன் என்ற நகரில் இருக்கும் ஒரு ஹோட்டல் மேஜை ஒவ்வொன்றிலும் நிமிஷங்களைக் காட்டும் ஒரு கருவி வைக்கப்பட்டிருக்கிறது. எதற்கு? ஒருவர் டிபனுக்கு ஆர்டர் கொடுத்துப் பத்து நிமிஷங்களுக்குப் பிறகு டிபன் வந்து சேர்ந்தால் அது அவருக்கு இலவசம்!

'காரவான்' — சரோஜா ராமச்சந்திரன்.

மைக் இல்லாமலேயே 'சோளம் வெதைக் கியிலே சொல்லிப்புட்டுப் போற புள்ளே'... பாடினான். அவர் மிகவும் பூரித்தார்.

நாட்டுத் தெம்மாங்குப் பாடல்கள் இன்னமும் உயிரோடிருப்பதையும், பள்ளி மாணவர்கள் அதைப் பெருமையுடன் பாடுவதையும் பாராட்டுவதாகக் கூறிச் சொற்பொழிந்தார்.

எல்லோரும் நெளிந்தார்கள். இவன் உள்பட...

பாடியது சினிமாப்பாட்டு... நாட்டுப் பாடலை நினைவு வைத்துப் பாடியதில்லை என்று அவருக்கு யார் புரிய வைப்பது? எப்படிச் சொல்வது?

பாராட்டி முடிந்ததும் தனது விரல் மோதிரங்களில் ஒன்றை - திருப்பதியில் ஒன்றரை ரூபாய் கொடுத்து அவர் மனைவி வாங்கியது - எடுத்து மேடையிலேயே இவன் கையில் போட்டுவிட்டு அணைத்து உச்சி முகர்ந்து... முத்தமிட்டு...

அன்று திக்கு முக்காடியதை இன்று நினைத்தாலும் இவனுக்கு மூச்சுத் திணறுகிறது.

அந்தப் பெரியவர்தான் இன்று மாலையோ இரவோ இந்தக் கிராமத்துக்கு வருகிறார்.

அவருக்கு மாலை போட்டு மரியாதை பண்ண வேண்டும். தன்னோடு படித்த நாச்சிமுத்துவின் சைக்கிளை வாங்கி மூன்று மைல் மிதித்து டவுனில் பூக்கடையைத் தேடிப் பிடித்து விசாரித்ததில் 'மாலை ஆறு ரூபாய்' என்றான்.

ஆறு ரூபாய்கள் வேண்டும். எப்படிச் சம்பாதிப்பது?

• • •

தீட்டப்படும் வெட்டரிவாளிலிருந்து தீப்பொறி பறந்தது.

''சுத்தமா ராவுடா?!'' என்றான் கூளப்பன் சாமி. முரட்டுமேனி, அச்சுறுத்தும் கண்கள்! ''ஒரே வெட்டிலே தலை துண்டாயிடணும்.''

''என்ன கூளப்பா?...'' கதிர்வேலு வந்து நின்றான். ''யாரை வெட்டப் போறியாம்?''



ஜாதி ஒழிப்புக் கூட்டத்தில் ''ஜாதி பேதம் இனியும் மண்ணில் இருப்பதைக் கண்டித்து இடித்துரைக்கக் கண்ணப்பக் கவுண்டருக்கு அடுத்து அழகப்ப நாயக்கரை ஆவேசத்துடன் அழைக்கிறேன்'' என்று முழங்கினார் கூட்டத் தலைவர்.

- கே. வேங்கடேச ரவி.

---

''உன்னைத்தான் கதிரு. மைத்தா நான் மூணு பீடி வச்சிருந்தே. கேட்டா ஒண்ணு கூட குடுக்க மாட்டேன்னேயில்லே?''

''அட பாவி பயலே!'' போலியாகப் பயந்தான் கதிர்வேலு. ''ஒத்தைப் பீடிக்காவ என்னைக் கொல்லுதே?''

சிரித்தார்கள்.

கதிர் வேலு சொன்னான்: ''திருநா, திருவிளான்னு வந்தாத்தான் உன் பட்டரையிலே வேலையே நடக்குது. கோழி வெட்டறதும் ஆடு பலி கொடுக்கறதும்... சே, சனங்க மாறவேயில்லேப்பா.'' — ஒரு பீடியை நீட்டினான். ''இந்தா நீயும் ஒண்ணு பத்த வைச்சுக்க.''

''அதான் இந்தத்தடவை தலைவரு வந்து உயிர்ப்பலி கூடாதுன்னு மறியல் பண்ணப் போறாருனாமில்லே?''

அதைக் கேட்டுக் கதிர்வேலு முகம் மாறினான். வண்டி நிறைய சோடாப் பாட்டில்களுடன் வந்து நின்று ஓர் ஆள் இவனைச் சேவித்தான்.

''கொணாந்துட்டியா? சரி. நீ போ முன்னாலே. நான் அரிவாளை வாங்கிட்டுச் சுருக்க வாரேன்.''



அந்த ஆள் போனதும், ''என்ன கதிரு? இத்தனை சோடா எதுக்கு? கடை போடப் போறியாக்கும்?'' என்றான்.

''அக்ஹாங்!'' தடுமாறினான். ''திருவிளா நேரம் காசு நாலு பார்க்கலாம். தே, அரு வாளைக் கொடு. நான் போவணும்.''

நீட்டி முடித்து நீட்டிய வெட்டரிவாளைக் கூர்பார்த்தவாறு வாழைமரத்தை நெருங்கியவன் சரேலென்று வீசவே...

ஒரே வெட்டில் மரம் சரிந்து விழுந்தது.

வெறியுடன் சிரித்தவாறு போய் விட்டான் கதிரு.

''பாவி மவனே! குலே தள்ளிக் கிட்டிருந்த சூலு மரத்தை வெட்டிப்பிட்டானே. உருப்படுவானா?'' வேதனையுடன் சாய்ந்த மரத்தையே பார்த்துக் கலங்கினான் கூளப்பன்.

• • •

**''ஏ** வைரவா. சோறு தின்னுட்டுப் போ புள்ளே!'' உள்ளேயிருந்து வள்ளியம்மை கத்தினாள். ''அதுக்குள்ளே எந்த ஊரைப் புடிக்க இந்த வேகம்?''

''எனக்குச் சோறும் வாணும் ஒண்ணும் வாணும். மாலே மருவாதி காட்டத்தான் வழியில்லாம போச்சு. கண்ணாலேயாவது பார்த்துட்டு வாரேன் ஆத்தா.''

''அட அதுக்கேன் புள்ளே பறக்குதே? அல்லாம் வர்றச்சேயே வெவரம் வெசாரிச்சுப் போட்டுத்தான் வாரேன். அவரு அடுத்த ஊரு திரு வெளாவுக்குப் போயிட்டுதேன் வராறாளாம். நீ வந்து சோறுண்ணு புள்ளே.''

''அவரைப் பார்த்தாதான் சோறு!'' வெளியேறி வந்து கால்போன போக்கில் நடந்தான்.

''தம்பீ!'' என்ற குரல் கேட்டதும் நின்று திரும்பினான்.

மசமசவென்று அந்த வீட்டு வாசலில் நின்றிருந்த அம்மாள் கூப்பிட்டாள். ''வா நான் தான் கூப்பிட்டேன்.''

வந்து நின்றான்.

''பயலுவளைக் காணோம். கொஞ்சம் டவுனு கடைத் தெருவுக்குப் போயி குங்குமப் பூவும் ஏலக்காவும் வாங்கி வரயா? சைக்கிள் தரேன். போயிட்டு வந்துரு. காசு தாரேன்.''

அவன் ஆவல் சிலிர்த்து எழுந்தது. ''எம் புட்டுக் காசு தருவிய?''

''ஏன்? எவ்வளவு வேணும்?''

''ஆறு ரூவா தருவீயளா?''

அதிர்ந்து போனாள். ''ஆறு ரூபாயா? எதுக்கு அம்புட்டுக் காசு?''

''மாலே வாங்கணும் – தலைவருக்கு மருவாதி காட்டோணும்.''

''மாலேதானே. நீ போயி வாங்கி வா. தாரேன்.''

''டவுனிலேருந்தே வாங்கி வாரேன்.''

''மாலேதானே வேணும். இத பாரு. நானே கட்டி வச்சிருக்கேன் நாலு மாலே. ஒண்ணு உனக்குத் தாரேன். போ.''

மூலேயில் பார்த்தான். சின்னக் கூடையில் நிறைய மாலேகள் பொதிந்திருந்தன. அவன் கண்களில் பூச்சி பறந்தது.

திரும்பிய வேகத்தில் ஒரு பெண்ணின் மேல் மோதிக் கொண்டு நின்றான்.

கத்தி போலக் கெலுகெலு என்றிருந்தாள் அவள். பெரிய கண்களால் பார்த்தாள். பார்வையின் கோணம் மாறுவதை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லே.

சைக்கிளே எடுத்துக் கொண்டு தெருவில் பாய்ந்து ஏறியவனைத் தெருமுனையில் கோசம் மாவின் கணவன் வழிமறித்து நிறுத்தினான்.

''அவசரமாப் போவுதேன். வழி விடுங்க சுறேன்.''

''அந்த வீட்டுக்குள்ளே ஏண்டா போனே? பாவி மவனே!'' அடித்தான்.

''நானு போவல்லே. அவங்கதேன் கூப்பிட் டாஹ. கடைக்குப் போயி வந்தா மாலே தரேன்னாஹ. வழி விடுங்கறேன்.''

''ஆத்தாகிட்டே சொல்லுதேன் படவ!?''

''சொல்லிக்க. பயமில்லே'' என்றவன் சைக்கிளே விடுவித்துக் கொண்டு பாய்ந்து ஏறி விருடியில் மறைந்து போனான்.

அந்த வீட்டை அருவருப்புடன் பார்த்து விட்டு மேலே நடந்தான் கோசம்மா வின் கணவன்.

• • •

**சோ**டா பாட்டில்கள் பறந்து வானத் தில் மோதிச் சிதறின. கூட்டம் கலகலத்துப் போயிற்று. கூச்சலும் குழப்பமும் தலைவிரித் தாடின. திருவிழா அடிதடியில் முடிந்தது.

மறியல் நடத்த வந்த தலைவர் தமிழ்ப் பெருங்கோவின் மூக்குச் சண்ணாடி தரையில் விழுந்து கூட்டத்தினரால் நொறுக்கப்பட்டது. கையால் துழாவியவாறு முன்னேறினார். ''டே துரை. எங்கே போயிட்டேடா? துரை?'' என்று கத்தியவர் மோதி நின்றார் – தொட்டுத் தொட்டுப் பார்த்தார். முரட்டு உருவம்.

''யார்? யாரது?'' என்றார் உரக்க.

அடுத்த சில நிமிடங்களில் –

தபாலாபீஸ்களில் நிருபர்களின் கும்பல் கூடிநின்று டிரங்காலுக்காக பொய்த்தது! காத்திருக்கும் பொறுமை இல்லாத சில நிருபர்கள் சாலேயில் போய்க் கொண்டிருந்த லாரிகளே வழிநிறுத்தி ஏறிக் கொண்டார்கள்.

சென்னைப் பத்திரிகை அலுவலகங்களில் பரபரப்பு நிரம்பியது. மோனோ டைப்புகளில்

அமெரிக்காவில் அட்லாண்டா என்ற நகரிலுள்ள மிருகக் காட்சி சாலையில் ஒரு மனிதக் குரங்கு இருக்கிறது. இதற்கு ஒருவர் ஒரு டி. வி. யைப் பரிசளித்திருந்தார். அதைக் குரங்கின் கூண்டுக்குப் பக்கத்தில் வைத்திருந்தார்கள். ஒருநாள் யாரோ அதைத் திருடிக் கொண்டு போய்விட்டார்கள். இந்தச் செய்தி பத்திரிகைகளில் வந்தது. சில நாட்களிலேயே ''நாங்கள் குரங்குக்கு வேறொரு டி. வி. வாங்கித் தருகிறோம்' என்று சுமார் 50 பேர் முன்வந்தார்கள். இப்போது குரங்கின் கூண்டுக்குள்ளேயே ஓர் உயர்தர கலர் டி. வி. இடம் பிடித்துக் கொண்டிருக்கிறது!

'டைம்' — அர்ஜுனன்.



செய்தி படபடக்கத் துவங்கியது. ப்ரூஃப் ரீடர்கள் காத்திருந்தார்கள்.

மத்திய செய்தி நிறுவனத்துக்கு டெலக்ஸ் பறந்தது.

'தலைவர் தமிழ்ப்பெருங்கோ கொலை செய்யப்பட்டார்.' ''அரசியல் கலப்பில்லாத தனிப்பட்ட பகை காரணமாகப் பழி வாங்கப் பட்டார்' என்றது அது.

• • •

சின்னதாக இரண்டு பொட்டலங்களை நீட்டினான் வைரவன். ''மாலை குடு ஆச்சி. நான் போகணும்.''

''மாலைதானே? அந்த ரூமுக்குள்ளே அந்தப் பொண்ணு கொண்டு போயி வச்சிருக்கு. போ. போய் வாங்கிக்க.'' சொல்லிக் கொண்டே போய்விட்டாள்.

தயக்கத்துடன் உள்ளே போனவன் அதிர்ந்து போனான். அப்படி ஆடையில்லாத நிலையில் ஒரு பெண்ணை அவன் பார்த்ததில்லை.

''என்ன இது?'' திரும்பிக் கொண்டான்.

''ஏன் ரொம்ப வெட்கப்படறே? இப்ப திரும்பிப் பாரு.''

''மாட்டேன்.. அசிங்கமா இருக்குது.''

''போர்வை போத்திக்கிட்டிருக்கேன். அசிங்கமா இருக்காது. திரும்பு.''

மெல்லத் திரும்பிப் பார்த்தான்.

''வேறே எதுக்கு இந்த வீட்டுக்குள்ளே வந்தே?''

''நானு வரல்லே. உங்க ஆச்சிதான் கூப்பிட்டது.''

''இந்த அறைக்குள்ளே ஏன் வந்தே?''

''மாலை எடுத்துப் போவ. நீ ஏன் இதை உள்ளே கொண்டு வந்தே?''

''எதுக்காகத் தொடுத்தேனோ அந்தத் தேவையில்லாம போச்சு. அதனாலேதான்.''

''ஆனா எனக்குத் தேவையிருக்கு. நான் கொண்டு போகட்டா?''

''கொண்டு போய் என்ன பண்ணப் போறே?''

''தலைவர் வரப் போறார். அவருக்கு மருவாதி...''

''மாலையா?'' சிரித்தாள். ''அவருக்கேன் இனிமே மலர் மாலை? இன்னும் கொஞ்ச நேரத்திலே அவர் பிணம் இந்த ஊர் வழியாத்தான் மெட்ராஸ் போவும்!''

''என்ன சொல்றீயே?'' என்றான்.



ஸூப்பிரெண்ட்: என்னய்யா இது ப்ரூஃப் எல்லாம் ஈரமாக்கிண்டு வந்திருக்கே?

கிளார்க்: மேனேஜர் வருகிறாரு! எல்லோரும் ஜில்லுன்னு ப்ரூஃப் பண்ணிண்டு வாங்கோன்னு நீங்கதானே நேத்துச் சொன்னீங்க!

கே. ஆர். அநுராதா

''அட அவரு செத்துப் போயிட்டாருப்பா. போலித் தலைவர் வேஷம் போட்டு ஊரை ஏமாத்தி அக்கிரமம் பண்ணிக்கிட்டிருந்தார். அவர் செய்த தப்புகளே அவரைப் பலி வாங்கிடுச்சு. நான் ஏன் சிரிக்கிறேன்னு பார்க்கறியா? நான் மட்டுமில்லேப்பா-எத்தனையோ அப்பாவிப் பொண்ணுங்க அவராலேதான் இந்தத் தொழிலுக்கு வந்துட்டோம். இப்ப சந்தோஷப் படாம இருப்போமா?''

மலர் மாலையை எடுத்துக் கொண்டு மூச்சு வாங்க அவளைப் பார்த்தான். ''அவரை மத்தவங்களுக்கு எப்படியோ எனக்குத் தெரியாது. என்னைப் பொறுத்த வரை அவர் நல்லவர். என்னைப் பாராட்டிப் பரிசு கொடுத்திருக்கார். அது போதும் அவரை நான் தலைவரா ஏத்துக்க. வரேன்'' என்று வாசல் வரை சென்று திரும்பினான்.

''இதை மாலையா அவர் கழுத்திலே போடக் கொண்டு போவல்லே. மலர் வளையமா அவர் காலிலே சாத்தப் போறேன்!'' போய் விட்டான்.

''தொண்டன்!'' சிரித்தவாறு எழுந்து ஆடைகளை மாட்டிக் கொள்ளத் துவங்கினாள். ''கண்மூடித்தனமான தொண்டன்!'' என்று சிரித்துக் கொண்டாள் அவள்.






# டி.ஜி.எல். கால்நடைத் தீவனம் தரத்தில் சிறந்தது



## ஏனெனில் எல்லா பகுதிப் பொருள்களையும் மிகச் சீரிய முறையில் தயாரிக்கிறது.




பல ஆண்டுகளாக டி.ஜி.எல் நிறுவனம் தனக்குச் சொந்தமான பண்ணைகளில் பலவகைத் தானியங்களையும் தோட்டப் பயிர்களையும் பெருமளவில் உற்பத்தி செய்து வருகிறது. பருத்திக் கொட்டை, நிலக்கடலை, எள், சூரியகாந்தி விதை இவற்றிலிருந்து உயர்தர எண்ணெய் வகைகளையும் தயாரிக்கிறது. மேலும் ஊட்டச் சத்து மிகுந்த தரமுள்ள கால்நடைத் தீவனத்திற்குத் தேவையான முக்கிய பகுதிப் பொருள்களும் பண்ணையிலேயே தயாரிக்கப்படுகின்றன.

இவையாவும் ஆண்டு முழுவதும் கிடைப்பதால் தான் டி.ஜி.எல் நிறுவனம் கால்நடைத் தீவனத்தைச் சற்று குறைந்த விலைக்கு விற்க முடிகிறது.

நான்கு ரகங்களில் தூளாகவும், மணிகளாகவும் கிடைக்கின்றது. எங்கள் விற்பனையாளர் உங்கள் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண உங்கள் வீடுதேடி வருவார்.



**டி.ஜி. லக்ஷ்மய்ய செட்டி & ஸன்ஸ்**
டி.ஜி.எல். ரோடு, ஆதோனி. 518301

maa HTGL - 39

**உங்கள் தேவைகளை எங்களது டீலர்களிடமிருந்து பெற்றுக்கொள்ளவும்**

**டீலர்கள் இல்லாத ஊர்களில் டீலர்கள் வரவேற்கப்படுகிறார்கள்**






பகவான் ரமணர் மௌனத்தாலேயே ஆன்ம சாந்தி என்ற மஹா உபதேசத்தைப் பொழிந்தவர். எவ்வித சங்கல்பமும் அற்ற அவர் உலகுக்கு உபதேசிக்க வேண்டுமென உத்தேசித்து உபந்நியசித்ததே கிடையாது. ஆனால் அவரது திரு முகத்திலிருந்து வந்த ஒவ்வொரு சொல்லும் உபதேசமாயிருந்தது. அடியாரின் வினாக்களுக்கு அவர் அளித்த மறுமொழிகள் மறைமொழிகளாகவே விளங்கின. அன்றாடச் சில்லறை நடப்புக்களைப் பற்றி அவர் கூறியவற்றிலும் சாச்வத மஹா ஸத்தியம் சுடர் வீசியது. ஜீவ மனமே அற்றுப் போன மஹர்ஷி உரையில் வல்லுநரான விந்தை எப்படி நிகழ்ந்தது? நம் பொருட்டாக ஈச்வரனே அந்த வாஸனாரஹிதரின் இதய வெளியைத் தனது லீலைப் பொய்கையாக்கி, அதில் கருணைமனம் என்ற மலரைத் தோற்றுவித்து, வாஸனை வீசும் வாசகம் எழும்பிப் பரவச் செய்தான் என்றே சொல்ல வேண்டும். அருள் மணத்தைச் சில மூச்சுக்கள் உள்ளிழுக்கலாம்.

• • •

குழந்தையொன்று பொம்மை மோட்டார் காரைத் தூக்கி வரக் காண்கிறார் மஹர்ஷி. ''மோட்டார் கார் நம்மைத் தூக்கிப் போகிறதென்றால், பயல் மோட்டார் காரைத் தூக்கி வருகிறானே!'' என்கிறார். சிந்தனை படர்ந்து சிறக்கிறது. சிரித்து நவில்வார்; ''உம்! அது மட்டும் சரிதானா? 'கார் நம்மைத் தூக்கி வந்தது' என்று சொன்னாலும் அதுவாகவா தூக்கி வந்தது? நாம் ஓட்டினால் தானே அது ஓடும்? நாம்தான் அதைக் கடத்துவிக்கிறோம், ஆனால் அது நம்மைக் கடத்துவித்ததாகச் சொல்கிறோம்! இப்படித்தான் லோக நடப்பும்! லோகம் என்பதெல்லாம் நம் மனதில் இருப்பதுதான். மனமே இல்லாமல் ஸமாதியிலோ, மயக்கத்திலோ, ஆழ்ந்த நித்திரையிலோ உள்ள போது உலக நடப்பு என்று ஒன்று நம்மைப் பாதிக்கிறதா என்ன? நம் மனதினால் நாமேதான் லோக வியாபாரத்தை உண்டாக்குகிறோம். ஆனால் லோக நடப்புக்கள்தான் நம்மை நடத்துவிப்பதாகவும் நாம் அதில் மாட்டிக் கொண்டிருப்பதாகவும் சொல்கிறோம்!''

• • •

அருணையை கிரிப் பிரதக்ஷிணம் செய்கிறார் ஞான கிரியான மஹர்ஷி, அடியார்களுடன், ஒரு நிலா இரவிலே. அடி அண்ணாமலையை அடுத்த மண்டபத்தை அவர்கள் அணுகுகையில் முன்னே சில இரட்டை மாட்டு வண்டிகள் செல்வதைப் பார்க்கிறார்கள். வண்டியிலிருப்பவர்கள் கால்களை நீட்டிப் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். ஆயினும் பழக்க விசேஷத்தால், மாடுகள் எவரும் ஓட்டாமலே செல்கின்றன.

பகவான் பகர்கிறார்: ''ஞானி தூங்காமல் தூங்குகிறவன். வெளி ஜனங்களின் பார்வையில் அவன் சில சமயங்களில் காரியம் செய்கிறாற் போலவும், சில சமயம் ஸமாதியில் இருப்பதுபோலவும், சில சமயம் தூங்குகிறாற் போலவும் தோன்றினாலும் தன்னளவில் அவன் எப்போதும் அசையாத ஒரே ஆத்மாவில்தான் நிலைத்திருக்கிறான். இதைத்தான் ஸஹஜ நிஷ்டை என்பது. வண்டிக்காரன் தூங்கினாலும் வண்டி ஓடுகிறது போல, அவன் அந்த நிஷ்டையிலேயே இருக்கும்போதுதான் அவனால் நடப்பதாகப் பிறருக்குத் தோன்றும் விவகாரங்கள் (வெளிக் காரியங்கள்) நடக்கின்றன. இப்போது இந்த வண்டி இங்கேயே நின்று விடுகிறதென்று வைத்துக் கொள்வோம். அப்போது வெளிக் காரியமும் இல்லை, வண்டிக்காரனும் தூங்கிக் கொண்டிருக்கிறான். இதுதான் ஞானியின் ஸமாதி நிலை. இந்த வண்டி சேர வேண்டிய இடத்துக்குப் போய்ச் சேர்ந்த பிறகு வண்டியை அவிழ்த்து விடுவார்கள். அப்போதும் வண்டிக்காரன் தூங்கிக் கொண்டே இருந்தால், அதுதான் ஞானியின் தூக்கம். வண்டி போகும் பொழுதும், நிற்கும் பொழுதும் வண்டியிலிருந்தே வெளியில் எடுத்துப் போட்ட போதிலும், வண்டிக் காரன் ஒரே தூக்க நிலையில் இருந்தது போல, உணர்ச்சியோடு காரியம் செய்யும் விவகார தசை, காரியமில்லாமல் உணர்வு மட்டுமுள்ள ஸமாதி நிலை, காரியம் உணர்ச்சி

இரண்டுமில்லாத தூக்கம் என்ற மூன்றிலும் ஞானியானவன் ஒரே ஸஹஜ ஸ்திதியில்தான் இருக்கிறான்.''

வான்மதினம் அக்னி மலைக்குப் பாலபிஷேகம் செய்ய, மஹர்ஷியும் அடியாரின் வெந்த மனங்களில் இப்படிச் சந்தன அபிஷேகம் செய்தபடி நகர எல்லைக்குள் வருகிறார். நல்ல கோடை காலமானதால் எல்லோரும் ஜன்னல்களை எல்லாம் திறந்து போட்டு விட்டே உறங்கிக் கொண்டிருக்கிறார்கள். ''ஜன்னல்கள் திறந்திருக்கின்றன. ஆனாலும் ஜன்னல் வழியே பார்க்கும் ஜனங்கள் தூங்குகிறார்கள். இதுதான் ஞானியின் துரிய ஸ்திதி* ஞானிக்குக் கண் (மனம்) ஜன்னல் மாதிரிதான். அது திறந்திருக்கிற மாதிரியே தெரியும். ஆனாலும் அவன் பார்க்க மாட்டான்'' என்றார் ஸதாவும் துரியத்தில் நிலைத்த புனிதர்.

• • •

அஞ்ஞான வீச்சின் பிரம்மாஸ்திரமாக உள்ள ஸினிமாவும் கூட பிரம்மமாம் ஆத்மாவின் உருவுமாகவே ஆகிறது நம் பகவானுக்கு. எத்தனை நுணுக்கமாக ஒப்புவமை காட்டுகிறார், பாருங்கள்:

''வெள்ளித் திரைதான் ஆதார ஆத்மா. மனதின் சலனங்கள் அதன்மேல் ஓடும் மூவி — ஸினிமா. ஸினிமாவில் கலர்க் காட்சிகள் வந்தாலும் திரை என்னவோ வாஸ்தவத்தில் வெள்ளையாகவேதான் இருக்கிறது. திரைக் காட்சியில் நெருப்புப் பிடித்துக் கொண்டாலும் திரை எரியவில்லை, மழை பெய்தாலும் திரை துளிக்கூட ஈரமாவதில்லை; புழுதி வீசினாலும் திரை அழுக்காவதில்லை. மனதின் ஸுக துக்கங்களால் ஆத்மா இப்படித்தான் பாதிக்கப்படுவதில்லை. ஆதாரமான திரையில்லாமல் ஸினிமாக் காட்சி இல்லை; ஆனால் ஸினிமா இல்லாமல் திரை உண்டு. ஆத்மா இல்லாமல் மனமும், லோக வியவகாரமும் இல்லை; ஆனால் மனமும், லோகமும் இல்லாத நிலையிலும் ஆத்மா ஸ்வச்சமாக இருக்கிறது: இருட்டில்தான் ஸினிமா வெளிச்சமாக ஓடுகிறது. கொட்டகை முழுதும் வெளிச்சமாகி விட்டால் ஸினிமாவே தெரியாது. அஞ்ஞான இருட்டில்தான் லோகம் வெளிச்சமாகத் தெரிகிறது. ஞானம் வந்து விட்டால் அந்தப் பெரிய வெளிச்சத்தில் அஞ்ஞானம், லோகம் எல்லாம் தெரியாமற் போய் விடும்.''

• • •

ஞானம் வந்தபிறகும்கூட, இப்பிறவியில் பயனளிக்கத் தொடங்கிய பழைய வினை (பிராரப்தம்) தீருகிற வரையில் ஒரு ஞானிக்குக் கர்மா உண்டு என்று சொல்வதுண்டு. ஆச்ரமத்தில் மின் விசிறியை ஒருவர் அணைத்தார். ஆனாலும் அதுவரை சுழன்ற வேகத்தில் அது பின்னரும் சில விநாடிகள் சுற்றிக் கொண்டேயிருந்தது. ''ஞானியின் பிராரப்த கர்மாவைப் போல'' என்றார், விசிறியைப் பார்த்துக் கொண்டேயிருந்த மஹர்ஷி!

(தொகுப்பு: ரா. கணபதி)

---

விழிப்பு, கனவு, உறக்கம் என்ற மூன்றைக் கடந்த *மூன்றுக்கும் ஆதாரமான—உயர்நிலை.

---

நல்ல நாடகமும் நல்ல நடிகர் குழுவும் இணைந்து சோபிப்பது நம்மிடையே கொஞ்சம் அபூர்வமான விஷயமாக இருக்கும் நேரத்தில் ஹேமா ஆனந்த தீர்த்தனின் 'மன்னிப்பே கிடையாது' நாடகம் ஓரளவு நம்பிக்கை ஊட்டுவதாகவே இருக்கிறது. முரளி ஒரு சிரமமான கதாபாத்திரம். ராஜசிம்மன் இப்பாகத்தைத் திறம்பட வகித்து நடிப்பில் முதல் இடம் பெறுகிறார். கல்லூரி முதல்வர் வீரராகவன் வேடத்தில் வரும் நாடகக் கதை ஆசிரியர் ஆனந்த தீர்த்தன் ஓர் அசல் பிரின்ஸிபாலாகவே தோற்றம் அளிக்கிறார்.

பாங்குக் கடைநிலை ஊழியன், தன்னை, ஒரு ஆபீசர் என்று சொல்லித் திருமணம் செய்து கொண்டு விட்டது, பம்பாய்க்கு மாமனார் மாமியார் கூட வசிக்க வந்த பிறகுதான் பிரின்ஸிபாலின் பட்டதாரி மகள் சுமதிக்குத் தெரிகிறது. அவள் ஓர் உண்மை விரும்பி. கணவன் ஏமாற்றி விட்டான் என்று தெரிந்ததும் குமுறுகிறாள். ஒரே வீட்டில் எல்லோர் முன் சகஜமாக வாழ்ந்தாலும் அந்தரங்கத்தில் தீண்டக்கூடாது என்று கட்டளையிட்டு ஒரே கட்டிலை, கட்டில், தரைப் படுக்கை என்று இரண்டாக வகுக்கிறாள்.

சுமதி பாத்திரத்தில் வரும் ஜெயராதா ஒரு திறமை மிக்க நடிகை என்பதைப் பல சந்தர்ப்பங்களில் நிரூபிக்கிறார்.

ஆனந்த தீர்த்தனின் கதைக்கு வசனம் எழுதி இயக்கும் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டிருக்கும் எஸ். கே. சீனிவாசன் நன்றாக உழைத்திருக்கிறார். விரசமில்லாத படுக்கை அறைக் காட்சியே அதற்குச் சாட்சி.

— பட்டினத்தார்



''டிபன் பாக்ஸை மறந்து விடாதீர்கள்'' புடவைத் தலைப்பில் கையைத் துடைத்துக் கொண்டு வந்தாள், ராஜி. நெற்றியில் முத்து முத்தாக வியர்வைச் சரம்; குங்குமக் கரைசல்! சற்றே தூக்கிச் செருகிய முன் கொசுவம். அதன் மேல் சற்றே பழுப்புக் கரை கட்டிய வெள்ளை பெட்டிகோட்.

வாசுவுக்கு இனம் தெரியாத எரிச்சல். குறுகுறுத்தது. மணி ஒன்பது. 38 நெ. பஸ்! அந்த நினைவே எரிச்சலைத் தந்தது. கிளியோ பாட்ரா, சித்தூர் பத்மினி, அனார்க்கலி... சே... சே... அவர்கள் கெட்டார்கள்! அந்த ஏ. ஜி. ஆபீஸ் ஏஞ்சல்., ரயில்வே ரதி, ஏன் பள்ளி ஆசிரியை பத்மா கூடத்தான் எத்தனை அழகு! பெண்கள் என்றால் அவர்கள் அல்லவா? பளபளவென்று பட்டு; முடமுட வென்று வாயில்; ஜிகுஜிகுவென்று ஸாடின்; வழவழவென்று நைலக்ஸ்! வாசு வேகமாக நடந்தான்.

இந்த ராஜியும் இருக்கிறாளே! அமெரிக்கன் ஷிபானைக் கூடக் கருணைபோல் சுருட்டிப் போட்டு... ஐயோ — பஸ்!.

ஒரு கோட்டையைப் பிடித்த வெற்றிப் பெருமிதத்துடன் கம்பியில் தொற்றி, படியில் ஊன்றி, உள்ளே நுழைந்து நகர்ந்து. முன்புறம் பெண்கள் பகுதிக்குச் செல்லுமுன் தன் சட்டையை ஒரு முறை நீவி விட்டுக் கொண்டான் வாசு!

பத்மா கையில் புத்தகக் கட்டுக்கள்... அதையும் பிடித்துக் கொண்டு நழுவும் நைலானையும் ஏந்திக் கொண்டு... பாவம், அந்த வேலைக்கு உதவ யாரையாவது கூப்பிடக் கூடாதோ? இவர்கள் எல்லாம் ஏன் இந்த வேலைக்குச் சேருகிறார்கள்...? நாசூக்காக ஏதாவது பார்க்கலாகாதா? அவளுடைய இனிய குரல் குழந்தைகளோடு கத்திக் கத்தி கமறிக் கெட்டுவிடாதோ?

அடுத்தது ஸ்டேஷன். எல்லோரும் இறங்க வேண்டியதுதான். அவரவர் பாதையில் பிரிய வேண்டியதுதான். வாசு ஏக்கத்துடன் பெருமூச்சு விட்டபடி டிபன்பாக்ஸை மறைத்துக்கொண்டு ஸ்டைலாக இறங்கினான்.

அன்று வாசுவுக்கு ஒரே தலைவலி. அவனுக்குப் பிடித்த தேங்காய் சாதம்கூடக் கசந்ததற்குக் காரணம் தலைவலியா... காலை நடந்த பூசலா? ஏன் தலைவலியேகூடப் பூசலின் எதிரொலியாகவும் இருக்கலாம் என்று தோன்றியது. ஒன்றுமில்லை, அன்று பொறுக்க முடியாமல் வாசு ராஜியிடம் காலையில் கூறி விட்டான். ''ராஜி, சமையல்காரி போல் வேஷமும் மூஞ்சியுமாக இல்லாமல் ஏன் 'பளிச்'சென்று இருக்கக் கூடாது? இந்தக் கோலத்தோடு நீ என்னை வழியனுப்ப வாசலுக்கு வரவேண்டாம்...''

வந்ததே கோபம் ராஜிக்கு.

''காலை வேளையில் சமைத்துப் போட எந்தச் சமையல்காரி எனக்கு இருக்கிறாள்? நான் சீவிச் சிங்காரித்து இளித்துக் கொண்டு நிற்க? அதிலும் இன்று காலையில் 'காஸ்' காலி!



உங்களுக்கென்ன, கண்டமேனு மினுக்கிகளைப் பார்த்து விட்டு ஏதேதோ கற்பனையில் இருக்கிறீர்களாக்கும். அவரவர் அடுப்பங் கரையில் வெந்தால் தெரியும்'' — அவள் விடவில்லை.

ராஜிக்குப் பற்றிக் கொண்டு வந்தது. ஆனால் ஓர் எல்லையில் தான் வாயை மூடிக் கொள்வதுதான் விவேகம் என்று அறிவு அவனை அடக்கியது. ''காலையில் டிரஸ் செய்து கொண்டு நிற்க வேண்டுமாம். எந்த ஆபீசுக்குப் போக வேண்டும் எனக்கு? அப்படி நான் கிளம்பினால் இவருக்கு வக்கனையாக யார் பண்ணிப் போடுவார்கள்... எது ஒன்றும் இலையில் குறையக் கூடாதே மஹராஜ பாவருக்கு?'' அவள் உள்ளூறக் குமுறினாள்.

அவனுக்கும் ஓர் ஆத்திரம். இவள் படித் தவள். வேலைக்குப் போனால் என்ன? எத்தனை பெண்கள் நாகரிகமாக, ஸ்டைலாகச் செல்ல

ஒருவர்: அதோ போகிறாரே அவர் ரொம்ப சந்தேகப் பேர்வழி!
நண்பர்: எப்படிச் சொல்றே?
ஒருவர்: நேற்று குளத்தில் கால் அலம்பி விட்டு விரலை எண்ணிப் பார்த்துக் கொள்கிறார்.

எஸ். சந்திரசேகர்.

வில்லை. பணம் மட்டுமா இதற்குக் காரணம்... ''எம்ப்ளாய்டு ஒய்ஃப்'' என்பதே சமூகத்தில் ஒரு பெருமையல்லவோ இப்போது... அவன் எதையோ இழந்தது போல் தவித்தான். ஆக முடிவு ஆசையுடன் கட்டித் தந்த அன்னம் கசந்தது. தலை வலி ஆபீசிலிருந்து சீக்கிரம் விரட்டியது, அவனை!

• • •

''ஹோல்டான், ஹோல்டான்''-இடிரென்ற அந்தக் குரலைக் கேட்டு எட்டிப் பார்த்தான் வாசு. 'அடே, இந்த பஸ்தானா தினம் காலையில் நீ பிடிப்பது?' அதோ ரதி ஓடி வருகிறாள்... அவனுக்கு முன்னால் பத்மா... உட்கார்ந்திருந்தாள்.

''என்னடி, லேட் இன்று... ஒரு நிமிஷத்தில் மிஸ்' ஆகியிருக்கும்...''

''அதை ஏன் கேட்கிறாய்? அந்தப் பொறுக்கி இன்று வேலில் விடவில்லை...''

''விடவில்லை என்றால்?''

''ஏய்... டோண்ட் பி ஸில்லி! ஏதாவது கற்பனையை ஓட்டாதே... ஏதோ ஊர் வம்பு பேசினேன். ஹாவ் இஸ் இன்டரஸ்டட் இன் ஹிஸ் ஸ்டோரீஸ்? என்ன செய்வது தலை எழுத்து...''

''உன் 'ஹப்பி'க்குத் தெரியுமா இவனை?..''

''ஐயோ... செத்தேன். நான் மிஸஸ் ஐயங்காரிடமிருந்து மிஸ்டர் சங்கரிடம் மாற்றி வந்ததே அவருக்குத் தெரியாது. அது ஒரு சந்தேகப்பிராணி!''

''அப்போது பேசாமல் ரிஸைன் செய்து விடேன்!''

''சே... சே... இப்போது பார் ஹாயாகக் காலை எட்டரை மணிக்குக் கிளம்பினால் மாலை வரை கவலையில்லை. ஐ யாம் ஃப்ரீ! வீட்டிலிருந்தால் அந்தக் கிழவிக்கு அரைத்துக் கரைத்தே தலை நரைத்து விடும் எனக்கு — சரியான 'போர்' அது ஒன்று வீட்டில்...''

வாசுவுக்கு ஆச்சர்யமாக இருந்தது. வீட்டு வேலைக்குப் பயந்து ஆபீசில் ஒருவனுக்கு ஜால்ரா போட்டுக் கொண்டு அவன் சேஷ்டைகளைப் பொறுத்துக் கொண்டு... வாசு எட்டிப் பார்த்தான். ரதியின் புடவை கசங்கி, தலை கலைந்து, முகத்தில் வேர்வையின் மேலேயே வரும் அவசரத்தில் பூசிய பவுடர் திட்டுத்திட்டாகப் பூத்துப் போய்... காலையில் பார்த்த திருஉருவமா இது?

மொத்தத்தில் அவள் கண்கள் தேடித் துழாவியது எங்கே? ரசிக்க விழைந்தது எங்கே? கசங்கிய புடவை, வாடிய மலர், இது மட்டுமா? கண்கள் சோர்ந்து இமைகள் கனத்துத் தொய்ந்த உடல், உள்ளத்தின் சோர்வெல்லாம் முகத்தில் பிரதிபலிக்க, 'போய்க் கண்ணை மூடிக்கொண்டு படுக்கையில் விழ மாட்டோமா' என்று உள்ளம் கெஞ்சுவது போல் உதடுகள் வறண்டு தெரிய...

''வீட்டில் குட்டிப் பிசாசுகள் என்ன செய்கிறதுகளோ! இதுகள் வேறு என் பிராணனை வாங்க ஏன் பிறந்ததுகளோ...'' என்று ஒருத்தி.

''உடம்பு கெஞ்சுகிறது... டைப் அடித்து, அடித்து விரல்கள் ஒடிந்து விட்டன... இன்றைக்கென்று பார்த்து வீட்டுக்காரர் சினிமா போலாமான்னு கேட்கப் போகிறார்—'' என்று ஒருத்தி.

''இந்த அம்மா இன்னேக்குப் பார்த்து வண்டி மாவைப் பிசைந்து விட்டு என்னைச் சப்பாத்திதட்டுஎன்று ஆர்டர் பண்ணிவிட்டுத் தான் அப்பாவுடன் 'மூவி' பார்க்கப் போய் விடாமல் இருக்க வேண்டும்...'' இது ஒருத்தி.

''ஏன்... நீங்களெல்லாம் கோழைகள்... உழைக்கும்போது 'ரைட்ஸ்' கேட்கத் தெரியாதவர்கள். வீ ஆல்ஸோ நீட்ஸ் ரெஸ்ட் அண்டு ரிலாக்ஸேஷன்...'' இப்படி ஒருத்தி...

''சே... என்ன லைஃப் வண்டியில் ஏறவும் முடியாமல் இறங்கவும் முடியாமல் ஒரு பிழைப்பு...''

வீட்டு வாசலில் ராஜி பூ வாங்கிக்கொண்டு இருந்தாள். ''ஏது இன்று இத்தனை சீக்கிரம்? உடம்பு சரியில்லையா?'' திடுக்கிட்டாள்.

அவன் உற்று நோக்கினான். சிவப்பு ஆர்க்கன்ஸா பிளவுஸ்... தலையில் ஒரு சிவப்பு ரோஜா. ராஜி சிம்பிளாக ஆனால்..இதமாக...

''இன்று ஒரு நல்ல செய்தி.''

''எது? என் தலைவலியா?''

''ஓ... வெரி ஸாரி... முதலில் காப்பி சூடாகத் தருகிறேன் – பின்பு பேசலாம்...'' அவள் உள்ளே ஓடினாள்.

காப்பி குடித்தபின்சற்றுத்தெம்பாகத்தான் இருந்தது வாசுவுக்கு. மாலையில் அனாவசியமாக ஹோட்டலில் ஒரு தண்ணியை ஊற்றிக் கொண்டு ஏரிக்கரையிலும் வேறு இடங்களிலும் நின்று பராக்குப் பார்ப்பதைவிட, வீட்டுக் காப்பி, உபசாரம் நன்றாகவேஇருக்கும் போல் இருக்கிறதே!

''மனுச்செய்த ஒரு கம்பெனியிலிருந்து 'டைப்பிஸ்ட்' வேலைக்கு 'ஆர்டர்' வந்திருக்கிறது...''

''என்னது? நீயா? எப்போது 'அப்ளை' செய்தாய்? சொல்லவில்லையே எனக்கு!''

''கிடைக்கட்டும் பார்க்கலாம் என்று இருந்தேன். இனிமேல் நானும் காலையில் 'டீக்'காக டிரஸ் செய்து கொண்டு 'ஹாண்ட் பாக்'கும் டிபன் பாக்கமாக உங்களுடன் சென்று – மாலையில்...''

''வேண்டாம்... வேண்டாம் ராஜி...'' வாசு பதறினான்...

அங்கு ஏதேதோ பேசும் 'பாஸ்'! ட[illegible]னிக்கும் ஒருவன்! இது மட்டுமல்ல... கசங்கிய மலராக, நைந்த புடவையாக, துவண்ட உடலாக நாள் முழுதும் உழைத்து - பிஸிகல், மெண்டல் ஸ்ட்ரெயினுடன் ... அவனுடைய ராஜி மாலை வேளைகளில்... ஊஹூம் – முடியாது! அவனால் கற்பனைகூடச் செய்ய முடியாது. பஸ்ஸுக்குக் காத்து, கண்கள் கரந்து... பார்த்து விட்டான் அவன் காலை அழகிகளின் மாலைக் கோலத்தை! அவனுக்கு வேண்டிய ராஜி, அவன் மனைவி! காலையைவிட மாலை வேளைகளில் 'டீக்'காக உடுத்தி, காப்பி டிபனுடன் நின்று, வயிறறிந்து பரிமாறி, உளமறிந்து பேசி, குணமறிந்து நடந்து இடமறிந்து குலாவி மகிழ்விக்கும் மனைவி அவனுக்கு வேண்டும். கடமையும், உரிமையும் கண்ணுக்குத் தெரியாமல் கலந்து இழையும் உயர்ந்த தாம்பத்யம் வேண்டும்... கேவலம் சம்பாதிக்கும் பணம் சமயத்துக்கு உதவும் மனைவியைத் தருமா? சில தியாகங்களைச் செய்ய அவன் தயாராயில்லை. ராஜிக்கு வந்த வேலைக்கான 'உத்தரவு' காற்றில் பறந்தது...

---



# நகம் நலமா?



சென்னை சிறைத் துறையில் பணி புரியும் ஏழு ஊழியர்களிடையே ஒரு விநோத பந்தயம்!

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கிய இப்பந்தயத்தின் முடிவு தேதி 9.3.79! இந்த இரண்டு ஆண்டுகளில் தனது ஏதேனும் ஒரு விரலில் எவரால் அதிகமான நீளம் உடைய நகத்தை வளர்க்க முடிகிறதோ அவரே பந்தயத்தில் வென்றவர். ஆளுக்குப் பதினைந்து ரூபாய் போட்டுப் பந்தயத்தில் வெற்றிபெறும் நபருக்கு நூறு ரூபாய் பரிசு, மீதியுள்ள பணத்தில் விருந்து!

ஏழு பேரில் முன்னணியில் இருக்கும் திருஎம். ஜெயராமனைச் சந்தித்தபோது 'நக வளர்ப்பு' அனுபவத்தை விளக்கினார்:

''இடது கை கட்டை விரலில் நகம் வளர்க்க ஆரம்பித்தேன். கட்டை விரல் நகம் அகலமாகவும், உறுதியாகவும் இருக்கும் என்பதால் சீக்கிரம் உடையாது என்கிற நோக்கத்தில்தான் கட்டை விரலைத் தேர்ந்தெடுத்தேன். சுமார் 1½ அங்குல நீள நகத்துடன் நான்தான் முன்னணியில் இருக்கிறேன். எனக்கு அடுத்தபடியாக இருப்பவரது நகம் என்னுடையதை விட 0.2 அங்குலம் குறைவு. போட்டி முடியச் சில தினங்களே இருப்பதால் அவரால் என்னை வெல்ல முடியாது. போட்டியில் பங்கேற்ற ஏழு பேரில் இரண்டு பேருடைய நகங்கள் பாதியிலே உடைந்து விட்டன. எல்லோரும் என்னைச் சந்திக்கும் போது என்னை விசாரிக்காமல் 'நகம் நலமா?' என்று கேட்கிறார்கள்.

நக வளர்ப்புக்காக இது வரை சுமார் 25 ரூபாய் செலவழித்துள்ளேன். இரவில் படுக்கு முன் நகத்தின் உட்புறமாக எலுமிச்சைச் சாறு தடவுகிறேன். வெளிப்புறத்தில் நெயில் பாலீஷ் வாரத்துக்கு ஒரு முறை தடவுகிறேன். இதனால் நகம் உறுதியாக இருக்கிறது.

எனக்கு இருக்கும் ஒரே கவலை மார்ச் 9ம் தேதி வரை நகம் உடையாமல் இருக்க வேண்டும் என்பது தான்!

பேட்டி: கோகுல்



# பாடுபடுவோருக்கு ஃபார்முலா எதற்கு?

## ஏ.ஸி. திருலோகசந்தர் பேட்டி

''என்னுடைய உண்மையான பெயர் உங்களுக்குத் தெரியுமா? தெரிந்தால் நான் இயக்கிய படங்களிலேயே எனக்குப் பிடித்தமான படமும் உங்களுக்குத் தெரிந்துவிடும்'' என்று புதிர் போடுவது போல் தம் பேச்சைத் தொடங்கினார் டைரக்டர் ஏ. ஸி. திருலோகசந்தர். மேலும் அவர் கூறினார்:

''பிடித்தமான படத்தில் பிடித்தமான காட்சியை முதலில் கூறி விடுகிறேன். பணக்காரத் தம்பதி ஏழை ரிக்ஷாக்காரனுக்கு உணவு படைக்கிறார்கள். ஆனால் சமையல்காரர் கூட ரிக்ஷாக்காரனுக்கு உணவு பரிமாற மறுத்துவிடுகிறார். தம்பதியே முன்நின்று ரிக்ஷாக் காரனுக்குப் பரிமாறுகிறார்கள். அத்தம்பதியின் செல்லக் குழந்தை திடீரென்று ரிக்ஷாக்காரனின் இலையிலிருந்து எச்சில் உணவை எடுத்து உண்டு விடுகிறது. அலறிப் புடைத்துக் கொண்டு அண்ணாந்து பார்க்கிறான் ரிக்ஷாக்காரன். முகத்திலே சிறிதும் சலனமின்றிச் சிரித்தபடியே நின்றிருக்கும் அந்த வீட்டின் தலைவர், 'சாதாரணமா உணவைச் சாப்பிட அடம் பிடிக்கும் என் பெண் இன்று பிரியமாகச் சாப்பிட்டு விட்டாளே!' என்று இயல்பாகக் கூறுகிறார். ரிக்ஷாக்காரன் கண்களுக்குத் தெய்வத் தம்பதியாக அவர்கள் தோன்றுகின்றனர். அந்த அன்புக்கு அன்று அவன் அடிமையாகிறான். அந்த அன்புக்காக வாழ்க்கையையே பலியிட்டுக் கொள்கிறான். அத்தகைய மகாத்மாவின் கதையைத்தான் நான் படமாக்கினேன். தம்பதியாக பாலாஜியும் சௌகார் ஜானகியும் நடித்தார்கள்.''

''படத்தில் 'பாக்ஸ் ஆஃபீஸ் ஃபார்முலா' என்று கூறுவார்களே அது...?'' என்று நான் கேள்வியை முடிக்கு முன்பே திருலோகசந்தர் இடைமறித்துச் சிறிது கோபத்துடனேயே பதிலளித்தார்:

''பாக்ஸ் ஆஃபீஸ் பார்முலா என்பது என்ன? அதை யார் உருவாக்கினார்கள்? படத்தின் ஆரம்பத்தில் ஏழையாக இருப்பது, இடைவேளைக்குப்பிறகு பணக்காரனாக ஆவது, ஃபைட், டான்ஸ், சண்டை, கனவுக் காட்சிகள் எல்லாம் நமக்கு நாமே உருவாக்கிக் கொண்டவைதாம். இவை எனக்குத் தேவையில்லை. என் படத்தில் கிழிந்த சட்டை மேலும் மேலும் கிழிகிறது. கதாநாயகனுக்குத் தாடி, மீசை வளர்கிறது. காசநோய் பிடித்த உருவம். ஆனால், அன்பு, சத்தியம், இவை



அவனிடம் அடைக்கலம். இப்படித்தான் நான் எனது ரிக்ஷாக்காரனைக் காண்பித்தேன். மக்களும் ஏற்றுக் கொண்டார்கள். பாராட்டினார்கள். வசூலிலும் வெற்றி பெற்றது.''

''இப்படி அதிகமாகப் படத்தில் துன்பச் சாயல் இருப்பதால் தான் நகைச்சுவைக் காட்சிகளை நிறையச் சேர்த்தீர்களோ?''

'' 'இவ்வளவு காமெடி தேவையா?' என்று பலர் என்னிடம் கேட்டார்கள். படத்திலேயே பலர் லயித்து அழுதுமிருக்கிறார்கள். இப்படிப் பட்ட கட்டங்களிலிருந்து ரசிகர்கள் ஓரளவு ஆறுதல் பெறத்தான் நகைச்சுவைக் காட்சிகளை நான் அதிகப் படுத்தியிருந்தேன்.''

''உங்கள் கதா பாத்திரங்கள் அதிர்ஷ்டத்தைவிட உழைப்பைத்தான் அதிகம் நம்புபவர்களாக இருக்கிறார்கள் இல்லையா?''

''சாதாரணமாக என்னுடைய கதாநாயகர்கள் அதிர்ஷ்டத்தை விடத் திறமையில், உழைப்பில், நம்பிக்கை வைத்தவர்களாகத்

தானிருப்பார்கள். ஒரு காட்சியில் ஒரு குழந்தை ரிக்ஷாக்காரனைப் பார்த்துக் கேட்கிறது: 'சாமி சாமிங்கறுங்களே எப்படி இருக்கும்?' அதற்கு ரிக்ஷாக்காரன், 'இதோ எந்தன் தெய்வம் முன்னாலே' என்று பாட்டாலேயே பதில் கூறுவது போல் அமைத்திருந்தேன். ஏழையின் உடல் உழைப்பிலே, சிரிப்பிலே, தாயின் அணைப்பிலே, மழலையிலே, இயற்கையின் இனிமையிலெல்லாம் அவன் தெய்வத்தைக் காண்கிறான். கோவிலில் அல்ல.

''கடைசியில் இறந்து போகும் போதுகூடக் கைகூப்பி, 'ஆண்டவா! ஆண்டவன் என்று நீ இருந்தால், உன்னிடம் இதுவரை எனக்காக எதுவும் கேட்டதில்லை. இதோ என் குழந்தையை இன்று விட்டுச் செல்கிறேன். அதை நான் காப்பாற்றியதைப் போல் நீ காப்பாற்றினால் போதும்' என்கிறான்.

''படத்தின் பாத்திரத்திற்கேற்ப சிவாஜி நடித்திருந்தார். 'ஆள் பாதி ஆடை பாதி' என்று நம் முன்னோர்கள் கூறியிருந்ததுபோல் அவர் கதாபாத்திரமாகத் தம்மை மாற்றிக் கொண்டதுமில்லாமல் அதற்கேற்பத் தம் உடையையும் மாற்றிக் கொண்டார். அவருக்கென்று வாங்கி வைத்திருந்த காக்கிச் சட்டையைப் புறக்கணித்து விட்டு ஏ. வி. எம். ஸ்டுடியோவில் வேலை செய்து வந்த ஒரு சாதாரணத் தொழிலாளியின் கிழிந்த சட்டையை வாங்கி அணிந்து கொண்டார்!''

''உங்கள் பட நிறுவனத்தின் சின்னம் ஏன் சிங்கத்துடன் போராடும் சிறுவனாக அமைந்திருக்கிறது?''



## மாணவர்கள் யாருக்குப் பயப்படுவார்கள்?

இப்பொழுது பல்கலைக் கழகங்களில் துணைவேந்தர் பதவிக்கு வருபவர்கள் மாணவர்களின் கிளர்ச்சிகளைச் சமாளிக்கும் திறமையுடன் தான் வரவேண்டும்... ஒரு பேராசிரியர் கல்லூரி முதல்வருக்குப் பயப்படுகிறார். முதல்வர், துணை வேந்தருக்குப் பயப்படுகிறார். துணை வேந்தர் அரசாங்கத்துக்குப் பயப்படுகிறார். அரசாங்கமோ மாணவர்களைக் கண்டு பயப்படுகிறது. மாணவர்களோ யாருக்கும் பயப்படுவதில்லை.

—சென்னை பல்கலைக்கழகத் துணை வேந்தர் ஜி. ஆர். தாமோதரன் பாராட்டு விழாவில் நீதிபதி மோகன் பேசியது.

தகவல்: ''சங்கரி புத்திரன்.''

''பரதன் சிங்கத்துடன் போராடுவதை உணர்த்தும் சின்னம் அது. அதன்கீழ் ''Efforts never fail'' என்ற வாசகம் இருக்கும். அந்தச் சின்னத்தின் பெயரில் சினிபாரத் நிறுவனத்தால் எடுக்கப்படும் படங்களிலும் அந்தக் கொள்கை இடம்பெற வேண்டும் என்பது என் எண்ணம்.''

''இவ்வளவு கூறிய நீங்கள் படத்தின் பெயரைக் கூறவேயில்லையே?''

''முதலில் என் பெயரைக் கூறிவிடுகிறேன். அதன் முதல் பாதிதான் படத்தின் பெயரும்! பாபு திருலோகசந்தர். இப்பொழுது தெரிந்திருக்குமே, படத்தின் பெயர்: ''பாபு.''!''

பேட்டி: சலன்

✖ பாபு படத்தில் சிவாஜி கணேசன் பாலாஜி, சௌகார் ஜானகி.





சமய வழிபாட்டின் ஒரு
அங்கமாக இருந்து வருகிறது
இந்திய பாரம்பரிய
நடனம். அசைவிலே
அழகு, இசையிலே எழில்-
எல்லாம் இறைவனுக்கு
அர்ப்பணம். பண்ணும் இசையும்
பாரதக் கலைக்கு பெருமைதேடித் தருகின்றன
எல்லாம் இறைவனின் திருவடிகளில்
சரணடைகின்றன. சிவனே நர்த்தனம்
புரிந்த நடனக் கடவுள்தானே. சிவதாண்டவம்
உலகத்தின் அசைவுக்கு ஒரு சின்னமல்லவா?

இதைப் போலவே தாவண்கரே பருத்தி
ஆலையில் நாங்கள் கற்பனைக்கும்
எட்டாத தரமுள்ள துணி
மணிகளை பாரம்பரிய கலை
நயத்துடன் வடித்துத்
தருகிறோம். ஒவ்வொருவரின்
ரசனைக்கேற்பஎழிலான நெசவும்
இழையின் கைதேர்ந்த இணைப்பும்
எல்லோரையும் வியப்பில் ஆழ்த்தும்.

இந்தியாவின் வடகிழக்குப் பகுதியில்
தோன்றிய மணிபுரி நடனம் பெண்களுக்கே
உரிய நளினமும் ஆண்மை மிக்க கிராமத்து
நடனமும் இணைந்தது. நடனமணிகள் அணியும்
அலங்காரக் குடை போன்ற பாவாடையும்
கண்ணாடி பொருத்த தெளிவான மேலணியும்
மணிபுரி கோவில் நடனத்தின் பாரம்பரிய
சிறப்புக்கு எழிலும் வண்ணமும்
காட்டுகின்றன. கிருஷ்ண பரமாத்மாவின் மீது
ராதை கொண்ட பக்தியை மையக் கருத்தாக
கொண்டது இந்த நடன பாணி.

நயமிக்க துணிமணிகள் எங்களது பரம்பரைச் சொத்து

# தாவண்கெரே

தி தாவண்கரே காட்டன் மில்ஸ் லிமிடெட், தாவண்கரே-577 002.

ஷோரூம்:

தாஜிபனபேட், ஹுப்ளி 580 020. சித்ரதுர்கா ரோடு, தாவண்கரே-577 002.
காவேரி பவன், பெங்களூர் 560 009,

சமூகத்தின் கீழ் மட்டத்திலுள்ள மக்களுக்கு ஆசைகள் கனவுகள், உணர்ச்சிகள் இருக்காதா? அத்தகைய ஓர் இளங்காதல் ஜோடியின் கதைதான் இந்தப் படிகள். மாணிக்கமும் (சிவகுமார்) செல்லக்கண்ணும் (ஷோபா) ஒரு கிராமத் திரையரங்கில் துப்புரவு செய்யும் தொழிலாளிகளாகப் பணியாற்றுகிறார்கள். அதன் நிர்வாகி ஒரு பெண்மணி. ஜெயந்தி(மனோரமா)என்று பெயர். செல்லக் கண்ணுக்கு அந்தக் கொட்டகையில் ஓடும் படங்களைப் பார்த்துப் பார்த்துத் தானும் திரை நடிகைகளைப் போல ஆடிப் பாடிக் காதலிக்க வேண்டுமென்று ஆசை. அவள் ஆசைக் கனலை விசிறிக் கொழுந்து விட்டெரிய மாணிக்கம் உதவுகிறான். கள்ளமில்லா உள்ளத்துடன் தூய காதல் வயப்பட்ட ஜோடிகளாக ஆடிப்பாடி மகிழ்கிறார்கள் மாணிக்கமும் செல்லக் கண்ணும். பட்டணத்தைச் சேர்ந்த படத் தயாரிப்பாளர் என்று கூறிவரும் ஏமாற்றுப் பேர்வழி இந்த இளஞ்ஜோடிகளின் சினிமா ஆசையை வளர்த்துவிடுகிறான். ஆசை ஆபத்தைத் தருகிறது. ஊராரின் ஏச்சுப் பேச்சு, மாணிக்கத்தைத் தன் காதலியுடன் பட்டணம் போக வைக்கிறது. அங்கு போன பிறகே தாங்கள் ஏமாற்றப்பட்டது தெரிகிறது. இடிந்து போகிறார்கள். ஆனால் அதிர்ஷ்ட தேவதையின் பார்வை ஓர் ஓவியனின் மூலமாக இவர்கள் மீது விழுகிறது. அந்த ஓவியர் இவர்களை ஒரு சிறந்த தயாரிப்பாளரிடம் அறிமுகப்படுத்த, செல்லக் கண்ணு கமலா தேவியாகக் கலை உலகில் கொடி கட்டிப் பறக்கிறாள். பொருள் புகழ் சேரவே, ஒதுக்கியவர்கள் வந்து ஒட்டுகிறார்கள். தொல்லைகள் தொடருகின்றன. காதலன் மாணிக்கம் கண்ணீரோடு வெளியேறுகிறான். சந்தேகங்கள் – சந்தர்ப்பச் சூழ்நிலைகள் சதி செய்கின்றன. விஸ்வநாத்தின் இந்த வலுவான கதைக்கு மகேந்திரன் திரைக் கதையும் வசனமும் சிறப்பாக அமைத்திருக்கிறார்.

கிராமத்துச் சிட்டுகளாக சிவகுமாரும் ஷோபாவும் ரொம்ப இயற்கையாக இயல்பாக நடித்திருக்கிறார்கள். திரையரங்குக்கு உரிமையாளராக வரும் மனோரமா தான் சினிமா நட்சத்திரமாக ஆசைப்பட்டுத் தன் சொத்துக்களையெல்லாம் புரோக்கரிடம் (ராமாராவ்) இழந்து பரிதவிப்பது படத்துக்குக் கலகலப்பைத் தருகிறது.

அழகிய கிராமக் காட்சிகளை இயற்கையின் எழில் கோலத்துடன் படமாக்கி இருப்பது இனிமை. வண்ணப் படமாதலால் குளுமை. காமிரா சபாஷ் பெறுகிறது. இரண்டு பாடல்கள் இனிமையாக ரீங்கரிக்கின்றன. டைரக்டர் மாதவனின் முத்திரைகளைக் காண முடியாவிட்டாலும் அவரது கை வண்ணம் தெரிகிறது. மொத்தத்தில் ஏணிப்படிகள் ஏமாற்றமளிக்கவில்லை.

– கௌசிகன்



# அமெரிக்க மாட்டுப்பெண்!

நினைத்து நினைப்பில்லாமல் இரண்டு தரம் நான் அமெரிக்கா போயிட்டு வந்துட்டேன் என்பதை நினைக்கும் போது எனக்கே ரொம்ப ஆச்சரியமாய் இருக்கு. 1970ம் வருஷம் முதல் தடவை போன போது தனியாய்ப் போறோமேன்னு ரொம்ப படபடப்பா இருந்தது. பாஷை தெரியாதேன்னு பயம்; அமெரிக்க நாட்டுப் பெண் எப்படி இருப்பாளோன்னு பயம்; பூஜை புனஸ்காரத்தோடு இருந்து பழக்கப்பட்ட நமக்கு அங்கு சரிப்பட்டு வருமான்னு பயம்.

ஆனா என் பயங்களெல்லாம் ரொம்ப அசட்டுத் தனமானதுன்னு சீக்கிரமே புரிஞ்சுண்டேன். நாட்டுப் பெண் மேரி தங்கமான குழந்தை. எனக்கு என்னென்ன தேவைன்னு புரிஞ்சுண்டு என் பிள்ளையும், நாட்டுப் பெண்ணும் நடந்துண்டதால புது இடம் என்கிற தயக்கம் இருக்கலை. மேரிக்கும், எனக்கும் பாஷை தெரியாத சங்கடம் இருந்தாலும், ஜாடை மூலமாக நாங்க எதையும் பேசக் கத்துண்டுட்டோம்.

வத்தக் குழம்பு, மிளகு குழம்பு, சாம்பார், பிசைந்த சாத வகைகள்னு தினுசு தினுசாய்ச் சமைப்பேன். மேரி ரொம்பப்பிரியமாய், விரும்பிச் சாப்பிடுவாள். நம்ம பக்கத்துச் சமையல் எல்லாம் நன்னு அவளே சமைக்கிறாள். ஆவக்காய் புளிக்காய்ச்சல், மணத்தக்காளி, கண்டக் காய் வத்தல் என்றால் அவளுக்கு அலாதி ஆசை. அந்த ஊர்ப் பெண்ணுக்கு இதெல்லாம் பிடிச்சது எனக்கு ரொம்ப ஆச்சரியமாய் இருந்தது.

என் 18 முழ புடவைகளை அழகாய் மிஷினில் தோய்த்து மடித்துக் கொடுப்பாள். வாய் ஓயாமல் அம்மா, அம்மா என்று கூப்பிட்டு எதையாவது சொல்லுவாள். மடிசார்ப் புடவையைக் கட்டிக் கொண்டு கொஞ்சமும் வெட்கப்படாமல் தெருவில் என் கூட நடப்பாள்.

1976ல் மேரிக்கு இரண்டாவது பிரசவ சமயம்; போய் உபயோகமாய் இருக்கலாமேன்னு நான் மறுபடியும் அமெரிக்கா போய் நாலு மாசம் இருந்துட்டு வந்தேன். குழந்தைகளைப் பார்த்துக் கொண்டு, சமையலையும் கவனித்ததால் எனக்கு அங்கு 'போர்' அடிக்கலை.

ஊருக்குத் திரும்பி வரும்போது ஒரு சுவாரசியமான சம்பவம். என் நித்தியப்படி பூஜைக்கான ஸ்வாமி விக்கிரகங்களை நான் எடுத்துண்டு போயிருந்ததை ஒரு ஏர் பேகில் தனியாய்ப் பாக் பண்ணி இருந்தேன். ஏகப்பட்ட சாமான்கள். இந்தியாவில் உள்ள குழந்தைகளுக்கு என, கண்ணில் கண்டதை எல்லாம் வாங்கித் தள்ளி இருந்ததால் லக்கேஜ் எடை உபரியாய் முப்பது பவுண்டு இருந்தது.

ஏர் போர்ட்டுக்கு வந்து விட்டோம். உபரி எடைக்கு எக்கச்சக்கமாய்ப் பணம் கட்ட வேண்டியிருந்தது. பிள்ளை பணம் செலவழிக்கத் தயாராக இருந்தான்.

மேரி என் ஸ்வாமி பெட்டியைத் தூக்கிப் பார்த்து "உங்க சாமிகளின் கனம் தான் முப்பது பவுண்டு; அதை வேணுமானால் இங்கே விட்டுவிட்டுப் போங்கள்" என்று வேடிக்கை செய்தாள்.

'என் ஸ்வாமி வழி காட்டுவார் பார்' என்று அவளிடம் சொன்னேன். அடுத்தகணம் நாங்கள் படும் அவஸ்தையைப் பார்த்துக் கொண்டிருந்த ஓர் இந்திய இளைஞன் அருகில் வந்தான். "என் பெயர் போஸ். நான் இந்தியாவுக்குத்தான் போகிறேன். என்னிடம் முப்பது பவுண்டு எடை குறைவாக உள்ளது. அம்மாவின் லக்கேஜை என்னுடையவைகளோடு சேர்த்து விடுங்கள்; எடை சரியாகி விடும். பம்பாய் வரை நான் கவனித்து அழைத்துப் போகிறேன்" என்றான்.

அவனோ வங்காளி; நான் தமிழ். அதிக எடையான அதே 30 பவுண்டு அவனுக்குக் குறைவாக இருப்பானேன்? நாங்கள் போன அதே நிமிஷம் அவனும் வருவானேன்? இது தெய்வச் செயல் இல்லாமல் வேறு என்ன?

என் பிள்ளையும், நாட்டுப் பெண்ணும் அசந்து விட்டார்கள். எனக்கு ஒன்றும் இது பெரிய அதிசயமாய்த் தெரியவில்லை. நான் வணங்கும் வேங்கடாசலபதி, கலியில் பிரத்யட்ச தெய்வம் என்பது எனக்கு நன்றாய்த் தெரியுமே!

சொன்னவர்:
ராஜலட்சுமி சூரி.
கேட்டு எழுதியவர்:
சந்திரா.

Printed by V. M[illegible] and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Guindy, Madras-600032. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசியக் காசு

# வெண்மை ஒளிவீசிப் பளிச்சிடும் பார்த்தவரெல்லாம் கூறுவர்...

இது

# டெட்

டிடர்ஜெண்ட் கட்டியின் சலவை




Shilpi DM 35A/78 Tam